கண்ணன் வெளியீடு — 7

# ஜக்கு

'ஆர்வி'








கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை-4



# முன்னுரை

கண்ணன் பத்திரிகையில் தொடர்ச்சியாக வந்த கதை ஜக்கு. பிறகுதான் புத்தகமாக வெளிவந்தது. இரண்டு பதிப்பு வெளி வந்து தீர்ந்துபோய் இப்போது மூன்ருவது தடவையாக, பல ஆண்டுகள் கழித்து வெளி வருகிறது. பல்லாயிரக் கணக்கான தம்பி, தங்கைகள் படித்து மகிழ்ந்திருக்கிருர்கள். அத்துடன் மட்டுமல்ல; பெரியவர்களாக வளர்ந்த பின்னரும் ஜக்குவை அவர்கள் மறவாமல் நினைவில் வைத்திருக்கிருர்கள். இதற்கெல்லாம் காரணம், கதையின் தத்ரூபமான தன்மையும் அதன் உயிரோட்டமும்தான் என்று சொல்லலாம். ஜக்குவைப் போன்ற மாணவன் ஒவ்வொரு ஊரிலும் இருக்கிருன்; ஒவ்வொருவருக்கும் அவன் தெரிந்தவனுகவும் இருக்கிருன். சிறுவர் குலத்துக்கு ஜக்கு புதியவனல்ல. அவர்களில் ஒருவன் அவன். அதனுல்தான் அவன் மறக்கமுடியாத பாத்திரமாக விளங்குகிருன்.

என்னுடைய நோக்கம் இதுதான். இதைப் படிக்கிறவர்கள் ஏதோ நம்பமுடியாத, நடக்க முடியாத கதை ஒன்றைப் படிப்பதாக நினைக்கக் கூடாது. தங்களுக்குத் தெரிந்த பையன் ஒருவனுக்கு நேர்ந்த சாதாரணமான வேடிக்கையான அநுபவமாகவே இதைக் கருதவேண்டும் அந்த அநுபவத்திலிருந்து பெறுகிறபயன் தங்களுடைய சொந்த இன்பமாக இருக்கவேண்டும். அவ்வளவுதான்.

சிறுவயதினர்களுக்குப் பலவகையிலும் பொழுது போக்கு அவசியம். உடலுக்குப்

பயிற்சி, உள்ளத்துக்குப் பயிற்சி எல்லாம் அந்தப் பொழுது போக்கிலே சேரும். உற்சாகமான, புஷ்டியான கதை உள்ளத்துக்கு உரமாக அமைகிறது. ஒழுக்கமும் அறிவும் நல்ல வகையில் வளர, மலர அது மறைமுகமாக உதவுகிறது. இந்த உள் நோக்கம் கொண்ட கதை ஜக்கு. கதையின் வெற்றியைப்பற்றித் தனியாக எதுவும் சொல்லவேண்டியதில்லை. வாசகர்களே உணர வேண்டிய ஒன்று அது. எழுதிப் பதினறு ஆண்டு களுக்குப் பிறகும் ஜக்குவுக்கு வாசகர்களிட மிருந்து வரவேற்பு இருக்கிறது என்ருல் அதிலிருந்தே அதன் வெற்றி விளங்கவில்லையா?

நல்ல விளையாட்டைப்போல உற்சாகமான, ஆரோக்கியமான இனிய பொழுதுபோக்குக் கதை ஜக்கு. இளம் வயதினருக்கு இதுபோன்ற பொழுது போக்கு மிகவும் அவசியம். இதை நான் திடமாக நம்புகிறேன்.

— ஆசிரியர்.

# 1

# பட்டணம் போகிறான்

"டேய், அதோ வராண்டா ஜக்கு!'' என்று மணி கூச்சல் போட்டான். "ஆமாண்டா, ஜக்கு தாண்டா!'' என்றான் சீதாராமன். உடனே அங்கிருந்த ஐந்தாறு பையன்களும், 'ஹோஹ்ஹோ!' என்று கைதட்டிச் சிரித்தார்கள்.

ஜக்கு தேரடித் தெருவைத் தாண்டி இந்த முடுக்குத் தெருவுக்கு வராமலே போய்விடத்தான் நினைத்தான், அங்கே தெருவில் ரோடுக்குக் கப்பி போட்டுக்கொண் டிருந்தார்கள். பெரிய ரோலர் எஞ்சின் ஒன்று குறுக்கும் நெடுக்குமாகப் போய்க் கொண் டிருந்தது. அதைப் பார்த்துக்கொண்டே யிருந்த ஜக்குவுக்கு அந்த எஞ்சின் டிரைவரைப் போகச் சொல்லிவிட்டு தான் ஏறி உட்கார்ந்து கொள்ள வேண்டும்போல் இருந்தது. ஆனால் அது எப்படி முடியும்? இதைப் பார்த்துக்கொண்டே முடுக்குத் தெருவுக்குள் வந்துவிட்டான் அவன். பள்ளிக்கூடப் பையன்கள் கண்ணிலும் பட்டுவிட்டான். இனிமேல் எப்படி அவர்களைப் பார்க்காமல் போவது என்று அவர்கள் இருக்குமிடத்துக்குத் தைரியமாய் வந்துவிட்டான்.

"டேய், ஜக்கு! உன்னை இன்னிக்குப் பட்டணத்திலே பார்த்தேனே!'' என்றான் மணி கிண்டலாக.

"எக்ஸிபிஷன் வாசல்லே டிக்கட்டுக்கூட வாங்கினியே!'' ன்றான் சீதாராமன்.

எல்லாப் பையன்களும் கொல்லென்று சிரித்தார்கள். ஜக்கு வர்களிடமெல்லாம் முதல் நாள் காலையில் ஜம்பமடித்து வைத்திருந்தான். "அடேய், பாருங்கடா! இன்னி ராத்திரி ங்கப்பாவோடே மெட்ராஸ் போகப் போகிறேன். இந்த லீவு ழுக்க அங்கேதான் இருக்கப் போகிறேன்'' என்று புருடா ட்டிருந்தான்.

ஆனால் அன்றிரவு அவனுடைய அப்பா பட்டணம் கிளம்பும் பாது ஜக்குவைப் பார்த்து, "சீச்சீ! இன்னும் இரண்டு வாரத் லே பள்ளிக்கூடம் திறக்கப்போறா! நீ எதுக்கடா அங்கே?

போ–போ!'' என்று சொல்லிவிட்டு அவர் மட்டும் புறப்பட்டுப் போய்விட்டார். ஜக்குவுக்கு ஆத்திரம் ஒரு பக்கம்; அவமானம் ஒரு பக்கம். நாளைக்குப் போது விடிந்தால் மற்றப் பையன்கள் கண்ணில் பட்டால் அதைவிட அவமானம் வேறென்ன வேண்டும்? அதனால் காலை முதல் வீட்டை விட்டு வெளியில் கிளம்பாமலே இருந்தான். ஆனால் அம்மா சும்மா இருக்கப்படாதா? தேரடிக் கடைக்குப் போய் இரண்டு தேங்காய் வாங்கிக்கொண்டு வரச் சொல்லி, கையில் அரை ரூபாயைக் கொடுத்து அனுப்பினாள்.

ஜக்கு இப்படி வேறு வழி இல்லாமல் வந்து இவர்களிடம் மாட்டிக்கொண்டு விட்டான். இருந்தாலும் சமாளித்துக்கொண்டு, ''வாயை மூடுங்கடா! என்னை மட்டும் இன்னிக்கு ராத்திரி தனியா வரச் சொல்லிட்டு அப்பா போயிருக்கார். தெரியுமாடா, பட்டிக் காடுகளா?'' என்று வீறுப்பாகக் கூறினான்.

''இருந்தாலும் இருக்கும்'' என்றான் சுப்புணி, அவனுக்கு ஜக்குவிடம் பயம். தனியாக ஆற்றங்கரைக்குப போனால் அவன் கண்ணில் படாமல் இருக்க முடியாது, சுப்புணி சொன்னதைக் கேட்டதும் மற்றப் பையன்களும் அதை ஒப்புக்கொண்டார்கள்.

''உனக்கு என்னடாப்பா! பட்டணமெல்லாம் போய், சுத்திப் பார்க்கப் போறே!'' என்றான் சீதாராமன்.

''எங்கேடா, எல்லாத்தையும் போய்ச் சுத்திப் பார்க்கப் போறேன்? எக்ஸிபிஷன் போவேன், பார்க் பேர் போவேன். பீச்சுக்குப் போவேன். ஜூவுக்குப் போவேன். ஹார்பருக்குப் போய் எங்கப்பாவோடே 'ஜல உஷா' கப்பல்லே ஏறிப் பார்ப்பேன். அந்தக் கப்பல் காப்டன் எங்கப்பாவோடே படிச்சவராம். சுமா ஒரு மைல், இரண்டு மைல் சமுத்திரத்திலே போகச் சொ[illegible], போயிட்டு வருவேன். அங்கே மோட்டார்ப் படகு இருக்கா[illegible], அதிலே ஏறி ஹார்பரை ஒரு சுத்துச் சுத்துவேன். அவ்வள[illegible] தான்!'' என்று ஜக்கு அடுக்கடுக்காய்ச் சரடு விட்டுக் கொண்[illegible] போனான்.

பிறகு, ''அட, நேரமாயிடுத்தே. நான் போயிட்டு ஏழு மண[illegible] வண்டிக்குக் கிளம்பணுமே!'' என்று அவர்களிடம் சொல்லிவிட்டு ஜக்கு மெதுவாக நழுவினான்.

''டேய், உன்னை ஸ்டேஷன்லே வந்து பார்க்கறேன் டோய்!'' என்று அவன் காதில் விழும்படிக் கூவினான் மணி.

''ரைட்!'' என்றான் ஜக்கு.

இப்படிச் சொல்லிவிட்டுப் போனுனேயொழிய ஜக்குவுக்குப் பிறகுதான் பெரிய யோசனையாகப் போய்விட்டது. 'என்னடா செய்வது? இப்படிச் சொல்லிவிட்டோமே!' என்று மண்டையைக் கலக்கிக் கொண்டான்.

ஜக்கு தேங்காய் வாங்குவதையே மறந்து விட்டான். தெருக் கோடியில் அடுத்த வீட்டு அம்புலு நின்றுகொண்டிருந்தாள். திடீரென்று எதையோ நினைத்துக்கொண்டு அவளைக் கூப்பிட்டு, "அடி அம்புலு! சட்டுனு ஓடிப்போய் ஒரு பேப்பரும் பென்சிலும் எடுத்துண்டு வா! சட்டுனு வரலே, அப்புறம் பார்த்துக்கோ!" என்று மிரட்டினுன்.

"என்னடா, ரொம்பத்தான் அதிகாரம் பண்றியோ! மூஞ்சியைப் பாரு!" என்று சொல்லிவிட்டு அம்புலு தன் வீட்டுக்குள் ஓடினுள். ஆனுல் சற்றைக்கெல்லாம் அவனிடம் வந்து, "அம்புலுன்னு கூப்பிட்டாப் போருதோ? 'அடி'ன்னு வேறே கூப்பிடணுமோ? போனுப் போறது. பாவம்னு கொண்டு வந்தேன், தெரியுமா!" என்று காகிதத்தையும் பென்சிலேயும் அவனிடம் கொடுத்தாள்.

ஜக்கு ஒரு மூலேயாகச் சென்று என்னவோ அவசர அவசரமாக அதில் எழுதினுன். பிறகு அதை நன்ருக மடித்தான். "அடி அம்புலு! இந்தா, இன்னும் அரை மணி கழிச்சு இந்தக் கடுதாசைக் கொண்டு போய் எங்கம்மாவிடம் கொடுக்கணும். தெரியுமா? நான் ஒளிஞ்சிண்டு பார்ப்பேன். நீ அதைப் பிரிச்சுக் கிரிச்சுப் படிச்சயோ, அப்புறம் பார்த்துக்கோ!" என்று அதைக் கொடுத்துவிட்டுக் கையில் இருந்த எட்டணுவுடன் அந்தத் தெருவை விட்டு மறைந்தான்.

அவன் தலே மறைந்ததும் அம்புலு அதை மெதுவாகப் பிரித்து எழுத்துக் கூட்டி வாசித்தாள்; "அம்மா! என்னைத் தேடாதே. நான் திரும்பி வர நாலு நாள் ஆகும் - ஜக்கு." அம்புலு விழித்தாள். 'பாரேன் இவனுடைய தைரியத்தை! நாலு நாள் ஆகுமாமே திரும்பி வர!" என்று எண்ணிக்கொண்டே ஜக்குவின் அம்மாவிடம் கொடுக்க ஓட்டமாய் ஓடினுள்.

ஜக்கு ஓட்டமும் நடையுமாக ரெயில்வே ஸ்டேஷனுக்கு ஓடினுன். அவன் எண்ணம், அடுத்த ஊரில் இருக்கும் அத்தை வீட்டுக்காவது போய் நாலு நாள் கண் மறைவாக இருந்துவிட்டு வந்துவிடுவது என்பதுதான். அங்கே போக இருபது காசு டிக்கட்டுச் சார்ஜ். அது போனுல் பாக்கி கையில் முப்பது காசு இருக்கும், பசி எடுத்தால் பார்த்துக்கொள்ளலாம். இரண்டு

இட்டிலி ஒரு வடை வாங்கித் தின்றால்கூடப் போதும். அதற்கு மேல் ஒரு டம்ளர் ஜலம்! அடேயப்பா! வயிறு நிறைந்து விடுமே!

ரெயில்வே ஸ்டேஷனுக்கு வந்த பிறகு அங்கே அவனுக்கு ஒரு புது யோசனை தோன்றியது. வண்டி வர இன்னும் இரண்டு மணி நேரம் இருந்தது. எட்டு மைல்தானே! நடந்தே போய் விடலாமே!

"உம்; அதுதான் சரி!" என்று ரெயில்வே லயனோடு நடக்க ஆரபித்தான். நடக்க நடக்க வழி நீண்டு போய்க் கொண்டே யிருந்தது. அடுத்த ஸ்டேஷன் வந்தது. அப்பொழுதும் அங்கே வண்டி வர ஒரு மணி ஆகும். அதற்குள் ஊரிலிருந்து யாராவது தேடிக்கொண்டு வந்துவிட்டால்? அது ஆபத்துதானே என்று மறுபடியும் நடக்க ஆரம்பித்தான். இன்னொரு ஸ்டேஷனும் வந்தது. அதற்கு அடுத்ததுதான் அத்தை ஊர். இதற்குள் இருட்டி வெகு நேரமாகிவிட்டது. அத்தை ஊருக்கருகில் ஒரு பெரிய ஆற்றுப்பாலம் இருக்கிறது என்று அவனுக்குத் தெரியும். வர வர மனசில் பயம் மூண்ட ஆரம்பித்தது. இருட்டில், தூரத்தில் குத்துக் குத்தாய் நின்ற கருக மரமெல்லாம் குட்டிப் பிசாசு உட்கார்ந்திருப்பதுபோல இருந்தன. திரும்பிப் பார்த்தால் திக், திக்கென்றது! தூரத்தில் ரெயில்வே லயனில் சிவப்பாய் ஒரு விளக்குத் தெரியவே அதையே பார்த்துக்கொண்டு ஜக்கு நடந்தான். உடம்பெல்லாம் குப்பென்று வேர்த்துப் போயிற்று. நடந்து நடந்து கால் வலி வேறே. தனியாய் மொட்டு மொட்டு என்று நடக்கவே பயம். அதனால், 'என்னை யாரென்று எண்ணினாய், பயலே!' என்ற ஒரு பாட்டின் அடியை எடுத்துத் திருப்பித் திருப்பிப் பாடிக் கொண்டே சிவப்பு விளக்கைப் பார்த்தபடி நடந்தான். பக்கத்து வயல்களில் தவளைகள் 'கொடாக் கொடாக்' என்று கத்தின. ஏதோ பட்சிகள் சல சலத்தன. ஜக்கு நடையைக் கூடியமட்டும் வேகமாகவே போட்டு நடந்துகொண் டிருந்தான்.

சிவப்பு விளக்கு இருந்த இடம் கிட்டே வந்த பிறகுதான் தெரிந்தது. அதுதான் ஆற்றுப் பாலம்! ஒரு பர்லாங் அகலம் அந்த ஆறு. ஆற்றில் தண்ணீர் ஓடுகிறது. இல்லாவிட்டால் இறங்கிப் போகலாம். ரெயிலில் வராமல் போனோமே என்று இருந்தது அவனுக்கு. வரும் வழியில் வடைகூட வாங்கிக் கொள்ளாமல் வந்துவிட்டான். நல்ல பசி வேறே. என்ன செய்வது? நல்ல வேளையாக அந்தப் பாலத்தில் மனிதர்கள் நடக்க இரண்டு தண்டவாளத்துக்கு நடுவில் ஓரடி அகலத்தில்




பலகை போட்டிருந்தது. அதன் வழியாக நடக்க ஆரம்பித்தான். பாதித் தூரங்கூட வரவில்லை. அப்போதுதான் அவன் நனறாகக் கவனித்தான். பின்னாலிருந்து அவனைத் தாண்டிப் பளிச்சென்று வெளிச்சம் அடித்துக்கொண் டிருந்தது. ‘கடகட’ என்ற சத்தம்! ‘ஷீல், ஷீல்’ என்று ஊதல் ரெயில் வந்துகொண் டிருக்கிறது!

அவனுக்கு இருந்த பிரமையில் அவன் ஆற்றில் விழாமல் இருந்ததே நல்ல காலந்தான்! பேசாமல், ஒன்றும் தோன்ருமல் ஆணி அடித்ததுபோல் நின்றுவிட்டான். வெகுநேரம் வரையில் என்ன நடந்தது என்றே அவனுக்குத் தெரியாது. கடைசியாக யாரோ அவனைத் தொட்டுக் கூப்பிட்டது தெரிந்தது. பார்த்தால் பாலத்துக்கு அருகில் ரெயில் நின்றிருந்தது. எஞ்சினிலிருந்த ஒருவன் கரித்துணியோடு இறங்கி வந்து, அவனைப் பிடித்து உலுக்கி, "தம்பி, யார் நீ?" என்று அதட்டிஞன்.

"நான் தான், சார்! எம் பேரு வந்து, சார்! ஜக்கு சார், எம் பள்ளிக்கூடத்துப் பேரு. ஜகந்நாதன் சார்?" என்ருன் ஜக்கு.

"அது சரி; இப்படித்தான் ரெயில் வர சமயத்துலே பாலத்துலே நிக்கறதோ?"

"வந்து சார்...வந்து..."

"பயப்படாதே. சொல்லு. நானே உன்னை ரெயில்லே கொண்டுபோய் விடறேன், சொல்லு!"

ஜக்குவுக்கு ஏதோ ஒரு நம்பிக்கை வந்துவிட்டது. எப்படியோ ஒரு தைரியமும் உண்டாயிற்று. அதனல் யோசனையும் தோன்றியது.

"நான் பட்டணத்துக்குப் போகணும், சார். எங்கப்பா வோடே வந்தேன், சார். இறங்கி ஒரு ஸ்டேஷன்லே தண்ணி சாப்பிடறத்துக்குள்ளே எங்க அப்பா இருந்த வண்டி முன்னல் போயிடுத்து, சார். நான் ஓடி வரதைப் பார்த்துட்டு எங்கப்பா, 'அடே அடுத்த வண்டியிலே வாடா! நான் போய் எக்மோர் ஸ்டேஷன்லே இருக்கேன்'னு இரைஞ்சு சொன்ஞர், சார், அதான் சார்!..." என்ருன். அந்த எஞ்சின் ஆளுக்குப் பரிதாப மாகப் போய்விட்டது. ஜக்கு சொன்னதை நம்பவும் முடியவில்லை; நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. பார்த்தால் பத்துப் பன்னிரண்டு வயசுதான் இருக்கும். 'இவன் இப்படியெல்லாம் ஜோடித்துப் பொய் சொல்லப்போகிருஞ. என்ன?' என்று பரிதாபப்பட்டு அவனை எஞ்சினிலேயே ஏற்றிக்கொண்டான்.

'போயும் போயும் அந்த ரோடு ரோலர் எஞ்சினிலே போகணும்னு ஆசைப்பட்டேனே! இப்போ நிஜ ரெயில் எஞ்சினிலேயே போகிறேனே! என்று ஜக்கு ரொம்ப சந்தோஷப் பட்டுக்கொண்டான். மனசிலிருந்த பயம், கவலை எல்லாம் மறந்துவிட்டது அவனுக்கு! பசிகூட மறந்துவிட்டது.

ஆனால் எஞ்சின் டிரைவருக்குப் பையன்கள் என்றால் உயிராம்! அவனுக்கு மூன்றும் பெண் குழந்தைகளாம். அதனால் ஜக்கு விடம் அலாதி அன்பு காட்டி அவனுக்குத் தன்னிடமிருந்த ரொட்டியும் டீயும் கொடுத்தான். அடுத்த ஜங்ஷன் வந்ததும் டிரைவர் அவனை அழைத்துக்கொண்டு போய், கார்டு வண்டியில் படுத்துத் தூங்கும்படி சொல்லிவிட்டான். "எக்மோர் வந்தால் எழுந்திருக்கலாம்; பேசாமல் தூங்கு!" என்று டிரைவர் சொன்ன போது ஜக்குவுக்கு ரொம்ப ஏமாற்றமாய் இருந்தது. நிஜ ரெயில் ஓட்ட அன்றைக்குள் கற்றுக்கொண்டு விடலாம் என்ற ஆசை வீணாகிவிட்டது. 'அட, அந்த ஊதலைத்தான் நாலைந்து தரம் அழுத்தி ஊதச் செய்தோமா?' என்று ஏக்கப்பட்டுக்கொண்டே தூங்கிப் போனான்.

"தம்பி, எழுந்திரு!" என்று யாரோ எழுப்பியதும் ஜக்கு வாரியடித்துக்கொண்டு தூக்கத்திலிருந்து விழித்தான். பொழுது விடிந்திருந்தது. ஜே, ஜே என்று கூட்டமும் சத்தமுமாய் இருந்தன. எழும்பூர் ஸடேஷன் இது என்று அவனுக்கு உடனே தெரிந்துவிட்டது. முதல் நாள் இரவில் தோன்றிய பயமெல்லாம் ஒரு நொடிக்குள் மறுபடியும் வந்து விட்டது.

"வா, உங்க அப்பா எங்கிருக்கிறார் காட்டு! உன்னைக் கொண்டு விட்டுவிடுகிறேன்!" என்றான் எஞ்சின் ஆள்.

ஜக்கு பேந்தப் பேந்த விழித்துக்கொண்டே அவனுடன் இறங்கிச் சென்றான். ஓரிடத்திலாவது அப்பாவைக் காணவில்லை. அவன் சொன்னது உண்மையாய் இருந்தாலல்லவா அப்பா அவனுக்காகக் காத்துக்கொண் டிருப்பார்!

"ஒருவேளை நடுவிலேயே இறங்கி உனக்காகக் காத்திருப் பாரோ?" என்றான் எஞ்சின் ஆள்.

"ஆமாம், ஆமாம்; அப்படித்தான் இருக்கும்!" என்றான் ஜக்கு.

அப்படிச் சொல்லி முடிக்கவில்லை! அதோ, எதிரே அவனைப் பார்த்துக்கொண்டே வேகமாய், கண்களில் கோபத்தீ பறக்க வருவது யார்? ஐயையோ, ஜக்குவின் அப்பாவேதான்!

ஜக்குவுக்குக் கால்கள் வெட வெடுத்தன.

"அப்பா, தெரியாமல்...இனிமே இப்படிச் செய்யலே அப்பா!" என்று 'ஹோ' என்று அழுதான் ஜக்கு.

"பிள்ளை தெரியாமல் செய்திடுச்சி. அடிக்காமே கூட்டிக் கிட்டுப் போங்க" என்று அனுப்பினன் எஞ்சின் ஆள்.

'நிஜமாகவே அப்பா எப்படி ஸ்டேஷனுக்கு வந்தார்?' என்று ஜக்கு ஆச்சரியப்பட்டான். அம்புலு அவனுடைய அம்மாவிடம் கடிதத்தைக் கொடுத்தாள். கூடவே மணி வந்து, 'ஜக்கு ஏழு மணி வண்டிக்குப் பட்டணம் போயிட்டானு?' என்று கேட்டான். அவனுடைய அம்மா பயந்து உடனே பட்டணத்திலிருந்த ஜக்குவின் அப்பாவுக்கு விவரமாய் அவசரத் தந்தி கொடுத்துவிட்டாள். அதனுல் வண்டி வருகிற சமயத்துக்கு ஜக்குவின் அப்பா ஸ்டேஷனுக்கு வந்துவிட்டார். இதெல்லாம் ஜக்குவுக்குத் தெரியவே தெரியாது. எஞ்சின் டிரைவருக்கும் தெரியாது. எப்படித் தெரியும், நீங்கள்தான் சொல்லுங்களேன்?



# 2

# பட்டணத்தில்

ஜக்கு மயிலாப்பூரிலுள்ள தன் மாமாவின் வீட்டில் மாடி அறையில் படுத்துத் தூங்கிக்கொண் டிருந்தபோது டெலிபோன் மணி கிணு கிணு என்று ஒலித்தது. ஜக்கு எழுந்து உட்கார்ந்தான். இதுவரையில் அவன் டெலிபோனில் பேசியதே இல்லை. பட்டணத்தில் பெரிய பெரிய ஆபீஸ்களிலும் பெரிய பங்களாக் களிலும் வியாபார ஸ்தலங்களிலும் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்ள இந்த டெலிபோன் உபயோகப்படுகிறது என்பது அவனுக்குத் தெரியும். ஆனால் பேசினது மட்டும் இல்லை. டெலிபோன் மணி விடாமல் கிணுகிணுக்கவே அவன் எழுந்திருந்து ரிஸீவரைக் கையில் எடுத்தான். எடுத்ததும், "யாரது?" என்று கணீரென்று கேட்டான்.

"ஹல்லோ! பேசுகிறது யார், ஜக்குதானே?" என்று பதில் வந்தது.

ஜக்குவுக்குத் தன் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டதும் ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது.

"ஆமாம், ஜக்குதான் பேசறேன். அங்கே பேசறது யார்?" என்று திருப்பிக் கேட்டான்.

"ஊரிலிருந்து சொல்லிக்கொள்ளாமல் வந்ததற்காக உன்னிடம் உன் அப்பா பேசவில்லை; சரிதானே!"

ஜக்கு பதில் சொல்லாமல் திகைத்தான். பேசினது ஏதோ தெரிந்த குரல்போல இருந்தது. யாராக இருக்கும் என்று அவன் யோசித்தான்.

"ஹல்லோ ஜக்கு! உன்னுடைய அப்பா இன்றைக்கு ராத்திரி ஊருக்குப் போகப் போகிறார். இல்லையா?"

"ஆமாம்" என்றான் ஜக்கு, சுருக்கமாய்.

"நீ ஒரு வாரம் கழித்துத்தான் தனியாகப் போகப் போகிறாய். அதுவும் உண்மைதானே?"

"ஆமாம்."

"உன்னிடம் பேசாவிட்டாலும் உன் செலவுக்காக உன் அப்பா உனக்குப் பணம் கொடுத்தாரே, எவ்வளவு?"

ஜக்கு சட்டென்று, "பத்து ரூபாய்" என்ருன். இதைக் கேட்டதும் அந்தப் பக்கத்தில் பேசிய குரல், கடகடவென்று சிரித்தது.

"அடேய் ஜக்கு, பொய்யா சொல்கிருய்? நான் சொல்லட்டுமா எவ்வளவு என்று? ரூ. 25/53! சரியாக இருக்கிறதா?"

ஜக்குவுக்குப் பேச்சே நின்றுவிடும்போல் இருந்தது. அப்பா முதலில் இருபத்தைந்துதான் கொடுத்தார். எல்லாம் ரூபாய் நோட்டுக்கள். அதனுல் எதற்கும் அவனிடம் சில்லறை இருக்கட்டும் என்று கையிலிருந்த ஐம்பத்துமூன்று காசையும் கொடுத்து விட்டார். இதெல்லாம் இந்தக் குரலுக்கு எப்படித் தெரிந்தது. ஜக்கு ரிஸீவரைக் கீழே வைத்துவிடலாமா என்று நினைத்தான். அவனுடைய தைரியமெல்லாம் பறந்துவிட்டது. என்னதான் நடக்கிறது பார்க்கலாமே என்று அசட்டுத் துணிச்சலுடன், "நீங்கள் சொன்னது சரியாய் இருக்கு. நான் முதல்லே எண்ணிப் பார்க்கலே" என்ருன். மறுபடியும் கடகடவென்று சிரிப்பு.

"டேய் ஜக்கு, ஜாக்கிரதை! இது பட்டணம். ஏதாவது இங்கே வந்து உன் தஞ்சாவூர் வாலேக் காட்டினுயோ, பார்த்துக் கொள். மரியாதையாக அவசியமான இடங்களைப் பார்த்து விட்டு நல்ல பையனுக ஊருக்குப் போய்ச் சேர வேண்டும்" என்றது குரல்.

"சரி-ரொம்ப சரி; நீங்க யாரு தெரியலியே?" என்ருன் ஜக்கு. அடுத்த நிமிஷம் டெலிபோன் சத்தம் டப்பென்று நின்றுவிட்டது; பதில் இல்லை. ஜக்கு ரீஸிவரைக் கீழே வைத்து விட்டு வாசலை ஒட்டிய ஜன்னல் பக்கம் வந்து நின்ருன். எதிர்ப் பங்களா வாசலில் நின்று இந்த ஜன்னலேயே பார்த்துக்கொண் டிருந்தான் ஒரு பையன். காலை முதல் அவன் இப்படி அடிக்கடி தன்னையே பார்ப்பதைக் கவனித்து வந்தான் ஜக்கு. அந்தப் பையன் ஜக்குவைக் கீழே வரும்படி கை ஜாடை காட்டி அழைத்தான்.

ஜக்குவுக்கு இது வித்தியாசமாகப் படவில்லை. ஏனென்ருல் அந்தப் பையனுக்கும் அவன் வயசுதான் இருக்கும். அவன் சின்னதாக ஒரு சைக்கிள் வைத்திருந்தான். அவன் வீட்டு வாசலில் ஓர் ஊஞ்சல் பலகை தொங்கிக்கொண் டிருந்தது. பந்து விளையாட விசாலமாய் இடம் இருந்தது. இப்படி ஒரு பையனுடைய சிநேகம் இருந்தால் எவ்வளவு நல்லது என்று அவன் எண்ணி யிருந்தான். இப்பொழுது அவனுக வலுவில் கூப்பிட்டதும் ஆனந்தப்பட்டுக் கீழே இறங்கி ஓடினுன்.

அவன் வாசலில் இறங்குவதும் அவனுடைய மாமா மோட்டார் சைக்கிளில் வந்து சேர்ந்ததும் ஒன்ருய் இருந்தன.

''எங்கேடா ஓடுகிருய்?'' என்று கேட்டார் மாமா. ஐக்கு பதில் சொல்லவில்லை. அதற்குள் அந்தப் பையன் வந்து, ''நான் தான் ஸார், அவனைக் கூப்பிட்டேன்'' என்ருன்.

ஜக்குவின் மாமா சிரித்துக்கொண்டே, ''அடே, நல்ல ஜோடி தாண்டா நீங்கள்! ஜக்கு, இவன் நந்து! பேஷ், பேஷ், பெயர்கூட இரண்டு பேருக்கும் மூன்று எழுத்துக்கள்தாண்டா! ஜக்கு! இனிமே உன் பாடு வேட்டைதான். நீ பார்க்க வேண்டிய இடமெல்லாம் வந்து சுற்றிக் காட்ட நந்து இருக்கான். அடி சக்கை!'' என்ருர்.

ஜக்குவும் நந்துவும் ஒருவரைப் பார்த்து ஒருவர் சிரித்துக் கொண்டார்கள். இதையெல்லாம் பின்புற வராந்தாவில் நின்ற ஜக்குவின் அப்பாவும் பார்த்துக்கொண் டிருந்தார்.

வெகு சீக்கிரமே நந்துவும் ஜக்குவும் தோள்மேல் கை போட்டுக்கொண்டு ஊஞ்சலாட ஆரம்பித்தனர். இரவு அப்பா ஊருக்குக் கிளம்புகிற சமயத்தில் ஜக்கு வந்துவிட்டான். சாப்பிட்டு விட்டு அவர் போனதும் ஜக்குவும் படுத்துக்கொண்டான். டெலிபோன் பேச்சு, அந்தக் கடகடச் சிரிப்பு, அப்புறம் நந்து வுடன் ஒரு நிமிஷத்தில் சிநேகமானது, ஊஞ்சல் ஆட்டம் இவற்றையெல்லாம் மாறி மாறி எண்ணிக்கொண்டே தூங்கிப் போனுன்.

மறுநாள் காலையில் ஜக்கு காபி சாப்பிட்டுவிட்டு வெளியில் வந்ததும் நந்து எங்கோ புறப்படத் தயாராய் டிரஸ் பண்ணிக் கொண்டு நின்றதைப் பார்த்தான்.

''என்னடா ஜக்கு! இன்னிக்குக் குடியரசு நாள். தெரியாதா உனக்கு? வருவதாஞல் என்னேடு நீயும் டிரஸ் பண்ணிக் கொண்டு கிளம்பு. ஒரு சுத்துச் சுத்திவிட்டு வரலாம்'' என்ருன்.

ஒரே நொடிதான். மாமியிடம் நந்துவோடு போவதாகச் சொல்லிவிட்டுப் புறப்பட்டு வந்துவிட்டான் ஜக்கு.

''முதல்லே எங்கே போகலாம்?'' என்று கேட்டான் நந்து.

''முதல்லே டவுனுக்குப் போய் அப்படியே ஹார்பருக்குப் போவோமடா!'' என்ருன் ஜக்கு. முதல் காரியமாய் இதுவரை பார்க்காத ஹார்பரையும், அங்கே வரும் கப்பலையும் பார்க்க வேண்டும் என்பதுதான் அவன் ஆசை.

"சரி; ஆனல் அங்கே நம்மையெல்லாம் உள்ளே விட மாட்டானடா!" என்ருன் நந்து.

"ஓஹோ! அதையுந்தான் ஒரு கை பார்த்துடலாமே! எப்படியாவது உள்ளே போறதா ஒரு பிரமாதம்?" என்ருன் ஜக்கு, கன அலட்சியமாய். சொல்லும்போது அலட்சியமாய்ச் சொல்லி விட்டானே தவிரச் சொன்னவுடன் திடீரென்று, 'தஞ்சாவூர் வாலேக் காட்டினயோ, பார்த்துக்கொள்' என்று யாரோ டெலி போனில் கூறிய விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. அந்த அச்சத்தை நந்துவிடம் காட்டிக்கொள்ளாமல், "சரி, புறப்படு வோமா?" என்று சொல்லிக் கிளம்பினன்.

பஸ்ஸில் ஏறி ஹார்பருக்கு வந்து சேர்ந்தார்கள். ஊரில் பையன்களிடம் வெறும் சவடால் அடித்துவிட்டு வந்திருந்தான். ஆனல் இன்றைக்கு உண்மையாகவே அவன் ஹார்பருக்கு வந்து விட்டான். இதை நினேக்கும்போது அவனுக்கு ரொம்பப் பெருமையாய் இருந்தது.

ஆனல் நந்துவையும் அவனேயும் அங்கே நின்ற காவற்காரன் உள்ளேவிட மறுத்துவிட்டான்.

ஜக்குவின் மூளே வேலே செய்ய ஆரம்பித்தது. பார்க்காமல் திரும்புவதா என்ற எண்ணத்தினல் மூளே பரபரவென்று வேலே செய்தது.

டக்கென்று மணிபர்ஸைத் திறந்தான். பிறகு டைரியை எடுத்தான். இதையெல்லாம் அந்தக் காவற்காரன் பார்த்துக் கொண்டுதான் இருந்தான்.

"ஏம்பா, டெலிபோன் எங்கே இருக்கு?" என்று ஜக்கு அவனேப் பார்த்துக் கேட்டான்.

காவற்காரனுக்கு யோசனேயாகி விட்டது. பையன்கள் யாரோ உத்தியோகஸ்தர் வீட்டுப் பிள்ளேகள்போல் இருந்தார்கள். டெலிபோனில் இருக்கிறவர்களேக் கூப்பிட்டு ஏதாவது சொன்னல் என்ன செய்வது என்று நினேத்து, "தம்பிகளா! உள்ளே யாரைப் பார்க்கப் போறீங்க?" என்று கேட்டான்.

"அதெல்லாம் உனக்கென்ன? நீதான் உள்ளே விடமாட்டேன் என்கிருயே!" என்ருன் ஜக்கு ஜம்பமாய்.

"நான் எப்போ சொன்னேன்?" என்ருன் காவற்காரன்.

"அப்போ உள்ளே விடு; நாங்கள் போய் எங்கப்பாவைப் பார்த்துவிட்டு உடனே வந்து விடுகிருேம்" என்ருன் ஜக்கு. நந்து ஒன்றும் பேசாமல் நின்றுகொண் டிருந்தான்.

காவற்காரன் பார்த்தான். 'சரி, சிறு பிள்ளைகள்! அப்புறம் ஒன்று கிடக்க ஒன்று வந்துவிடப் போகிறது' என்று ஜக்குவைப் பார்த்து, "ஜல்தியாய்த் திரும்பிடணும், தெரியுமா?" என்றான்.

ஜக்கு, "ஓ! ஜல்தியாய்த் திரும்பிடுவோம்" என்றான்.

அடுத்த நிமிஷம் கப்பல் நிற்குமிடத்துக்கு வந்து நின்றார்கள். அப்பொழுது 'ஜல்-ஜல்' என்ற பிரயாணிக் கப்பல் கரையோரத்தில் நின்றுகொண்டிருந்தது. ஒரே மூவர்ணக் கொடிகளாலும் தோரணங்களாலும் கப்பலை அலங்கரித்திருந்தார்கள். அடேயப்பா, எவ்வளவு பெரிய கப்பல்! எவ்வளவு உயரம்!

ஜக்குவும் நந்துவும் பிரமித்துப் போய் நின்றார்கள். 'இந்தக் கப்பலை யார் கட்டினார்களோ! எங்கேயிருந்து இது வந்ததோ! எங்கே போகப் போகிறதோ!' - ஜக்குவுக்கு இந்த மாதிரி நினைவுகள் எழுந்தன. கொஞ்ச தூரமாவது இந்தக் கப்பலில் பிரயாணம் செய்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்!

அடுத்த கணம் கப்பலின் தட்டுக்கு ஏறும் படிகளில் கால் வைத்து நின்றான் ஜக்கு.

"டேய், யார் அது?" என்று ஒரு குரல் அவனைப் பார்த்து அதட்டியது.

ஜக்கு திரும்பிப் பார்த்தான். "இறங்கு கீழே!" என்றான் அங்கே வந்த ஆள்.

"ஏன்?" என்றான், ஜக்கு பயப்படாமல்.

அதற்குள் பளபளவென்று பொத்தான்களும், சமுத்திர நீலத்தைத் தோற்கடிக்கும் நீலக் கோட்டும், அழகான தொப்பியும் அணிந்த ஓர் உத்தியோகஸ்தர் அவன் எதிரே வந்து நின்றார். இவர்தான் கப்பல் காப்டன்போல் இருக்கிறது என்று எண்ணிக்கொண்டு தைரியமாய், "காப்டன், பாருங்க காப்டன், ஏறப்படாது என்கிறான் இவன்!" என்றான் ஜக்கு. நந்து கீழே போய் விட்டான்.

அவர்தான் காப்டனோ என்னவோ! ஜக்கு அப்படித்தான் அவரைக் கூப்பிட்டான். அவர் அவனை மேலும் கீழும் பார்த்து, "ஹூ யூ?" என்றார் இங்கிலீஷில்.

"ஜக்கு! ஜகந்நாத்" என்றான் ஜக்கு.

"எங்கே வந்தே?" என்றார் காப்டன். இங்கிலீஷில்தான் பேசினார்; ஜக்குவுக்கு இந்த இங்கிலீஷ் எல்லாம் புரியாதா, என்ன? "கப்பல் டெகொரேஷனைப் பார்க்க!" என்றான்,



"ஓ! யார் உங்க அப்பா?"

"கிருஷ்ணமூர்த்தி?"

"விச் கிருஷ்ணமூர்த்தி? போர்ட் போர்மென், கிருஷ்ண மூர்த்தி?"

"எஸ், எஸ்!"

காப்டன் அவன் முதுகைத் தட்டினார். "ஓடு, பாத்துட்டு உடனே திரும்பிடு; இன்னிக்குப் பத்திரிகை நிருபர்கள் வருகிருங்கோ! அதற்குள்ளே திரும்பிடணும்" என்ருர் தமிழில்.

"அடே நந்து, வாடா!" என்று கூப்பிட்டான் ஜக்கு. நந்து அங்கே இருந்தால்தானே? பயந்துபோய் ஒரு மூலையில் நின்று

கொண் டிருந்தான். ஜக்கு கையைக் காட்டிக் கூப்பிட்டும், "நீ பார்த்துவிட்டு வா! நான் இங்கேயே நிற்கிறேன்" என்ருன்.

ஜக்கு போனுன் போனுன், போனதுதான். மணி பன்னிரண்டு ஆகிவிட்டது. நந்துவுக்குப் பசி வயிற்றைக் கிள்ளிற்று. எவ்வளவு நேரம் அவன் தனியாக மொட்டு மொட்டு என்று நிற்பான்! கப்பலைப் பார்த்தபடியே நின்று விழித்துக்கொண் டிருந்தான். திடீரென்று கப்பல் நடுவில் ஒரு வெளிச்சம் தெரிந்தது. ஒரு ஜன்னல் திறந்திருந்தது; அதன் வழியாக ஜக்கு எட்டிப் பார்த்துககொண் டிருந்தான். கையில் ரொட்டியை வைத்துத் தின்றுகொண்டே, "டேய் நந்து! அங்கேயே நிற்கிருயே, வாடா!" என்று கூப்பிட்டான்.

அந்தச் சமயத்தில் வாசல்புறமிருந்து ஒரு கூட்டம் வந்தது. வெள்ளை வெளேரென்று வேஷ்டி, சட்டை உடுத்துக் கொண்டு சிலரும், தடபுடலாகக் கப்பல் யூனிபாரம் அணிந்த சிலரும், போலீஸ்காரர்கள் சிலருமாக வந்துகொண் டிருந்தார்கள். நந்து ஒரு மூலையில் உடனே பதுங்கிக்கொண்டான். ஜக்கு மட்டும் பயப்படாமல், 'ஹி, ஹி' என்று சிரித்தவண்ணம் அவர்களைப் பார்த்துக்கொண் டிருந்தான்.

அப்போது கூட்டத்திலிருந்து காமிரா வைத்துக்கொண் டிருந்த ஒருவர் முன்னுல் வந்தார். கப்பலின் மேல்தளத்தில் மாலுமிகள அணிவகுதது நின்றதை அவர் போட்டோ பிடிக்கலாஞர். ஜக்கு அந்த இடத்தை விட்டு அசையவில்லை.

'கிளிக்!' போட்டோ எடுத்தாயிற்று. கொடியேற்று விழா முடிந்தது. ஜக்குவும் சிரித்தபடியே போட்டோவில் விழுந்து விட்டான். அது அவனுக்கே தெரியாது.

சற்றுப் பொறுத்து ஜக்குவின் தோள்மேல் யாரோ கை வைத்தாகள். அவன் திடுக்கிட்டான். பார்த்தால் முதலில் அதட்டிய காவற்காரன்.

"இங்கே என்ன செய்யறே? உம்!" என்று அவன் மறுபடியும் அதட்டினுன்.

வாய் முழுவதும் ரொட்டி. ஜக்குவால் பேச முடியவில்லை. அவன் ஜக்குவின் கையைப் பிடித்துப் படிகள்வரை அழைத்துக் கொண்டு வந்துவிட்டான். ஜக்கு திமிறிகொண்டே வந்தான்.

"போ, இனிமே இப்படியெல்லாம் வந்து கப்பலுக்குள் உன் இஷ்டப்படி சுத்தினியோ, போலீஸ்காரனகிட்டே உன்னை விட்டு விடுவேன், போ!" என்ருன் காவற்காரன். அதற்குள்

காப்டன் அங்கே சிரித்துக்கொண்டே வரவே காவற்காரன் போய்விட்டான். அவர் காதில் விழும்படி ஜக்கு, "நான் எல்லாவற்றையும் பார்த்துவிட்டேன். இனிமேல் போகத்தான் போறேன். அதற்குள்ளே ரொம்ப விரட்டறயே!" என்றான். காப்டனும் சிரித்தவாறே போய்விட்டார்.

நந்து இவ்வளவையும் பார்த்துவிட்டு, "அடே ஜக்கு, இனிமே போகலாண்டா வாடா" என்று கூப்பிட்டான்.

அடுத்த நிமிஷம் இருவரும் ஆனந்தமாய்க் கைகோத்துக் கொண்டு வெளியில் வந்தார்கள். "பார்த்தாயாடா ஜக்குவின் வேலையை! உள்ளே விடமாட்டானும்! நம்மைக் கண்டு இந்த வாசல் காவற்காரன் அதோ ஸல்யூட் அடிக்கிறான், பார்த்தாயா? எல்லாத்துக்கும் சாமர்த்தியம் வேணும்" என்றான்.

உண்மையாகவே அவர்கள் வெளியில் வரும்போது வாசல் காவற்காரன் யாருக்கோ ஸல்யூட் அடித்துக்கொண்டுதான் இருந்தான்.

வீட்டுக்குப் போய்ச் சட்டையைக் கழற்றி வைத்துச் சாப்பிட்டுவிட்டு ஜக்கு மாடியில் படுத்துக் களைப்பாறினான். சாயங்காலம் ஆயிற்று. அப்போது டெலிபோன் மணி பயங்கரமாய்க் கிணுகிணுத்தது.

"டேய், ஜக்கு! ஹார்பர் போயிருந்தாயா?"

ஜக்கு பயத்துடன், "ஆமாம்" என்றான்.

"அடுத்தபடி லைட்ஹவுஸ் போகப் போகிறாய்; இல்லையா?"

"ஆமாம்" என்றான் ஜக்கு, தன்னையும் அறியாமல்.

"ஜாக்கிரதை!" என்றது அந்தக் குரல்.

ஜக்கு வெடவெடவென்று கைகள் நடுங்க டெலிபோன் ரிஸீவரைக் கீழே வைத்துவிட்டான்.

# 3

## மேலே பறக்கிறன்

ஜக்குவுக்கு இதற்குள் ஊரிலிருந்து பல கடிதங்கள் வந்து விட்டன. மணி, சீதாராமன், சுப்புணி எல்லாரும் எழுதியிருந்தார்கள். அம்புலுகூடக் குண்டு குண்டாக ஒரு காடு எழுதியிருந்தாள். "ஜக்கு! உன் போட்டோவைப் பேப்பர்லே பார்த்தேன். மாமி காட்டினு. ரொம்ப ஜோராய் இருந்தது. ஜல் - ஜல் கப்பல் எப்படி இருக்கு? நீ வரபோது எனக்கு ஒரு கண்ணை மூடித் திறக்கும் செலுலாயிடு பொம்மை வாங்கிண்டு வா. எங்க அப்பாகிட்டே பணம் வாங்கிக் கொடுத்துடறேன்" என்று எழுதியிருந்தாள்.

ஜக்குவுக்கு ரொம்பப் பெருமையாய் இருந்தது. அன்றைக்கு வந்திருந்தவர்கள் எல்லாரும் பத்திரிகைக்காரர்கள். அந்தப் போட்டோவைத் தங்கள் பத்திரிகைகளில் பிரசுரித்துவிட்டார்கள். கப்பலில் நின்றபடி ஒரு பையனுடைய போட்டோ எல்லாப் பத்திரிகைகளிலும் வந்தால் யாருக்குத்தான் பெருமையாய் இருக்காது? எவ்வளவு ஊர்களில் எவ்வளவு பேர் பார்க்கிறர்கள்!

ஜக்குவுக்கு இரண்டு நாளாய் ஓய்ச்சல் ஒழிவு இல்லை. நந்துவின் வீட்டு மாடிக்கும் அவன் வீட்டு மாடிக்கும் ஒரு நூல் டெலிபோன் கட்டினன: நூறு நூறு கஜத்துக்கு இரண்டு நூல் கண்டுகள், நாலு அட்டைக் குழாய்கள் - இவைதாம் செலவு. நூல் ஒன்றிலும் நடுவில் உராயாமல் அட்டைக் குழாய் மூடியில் ஓட்டை போட்டு வந்து சேரும்படி செய்தான். இவன் வீட்டு மாடி அறையையும் நந்துவின் வீட்டு மாடி அறையையும் மறு நாளே இரண்டு நூல் தந்திக் கம்பிகள் இணைத்தன.

அது மணி அடிக்காது. ஜக்கு, "அடேய், மேலே போய்க் காதை வைத்துக்கொள்ளடா!" என்று சொல்லிவிட்டு வருவான். போனதும், "ஹலோ" என்று கூப்பிடுவான் நந்து. சற்று நேரத்தில் டெலிபோனில் ஒருவன் பேசுவது மற்றவனுக்குக் கேட்கும்.

"அடே நந்து, சாப்பிட்டு விட்டாயா?"

"சாப்பிட்டுவிட்டேன். நீ?"

"நானும் சாப்பிட்டாச்சு."

"பேசறது நன்ருய்க் கேக்கறதாடா?" என்ருன் நந்து.

"ஓ! உனக்கு?" என்று கேட்டான் ஜக்கு.

"எனக்குந்தான்."

"அன்னிக்கு லைட்ஹவுஸ், கோட்டை எல்லாத்தையும் பார்த்துட்டு வந்தோமே. நாம்ப பெரிய எஞ்சினீயராகப் போனு எவ்வளவு ஜோராய் இருக்கும்! அப்படிப் போகணும் போல இல்லே?"

"ஆமாண்டா."

"பெரிய கிரிக்கெட் சாம்பியனுகி டெஸ்ட் மாட்ச் எல்லாம் விளையாடி எல்லாரும் புகழும்படி ஆகப் போறேன்!"

"நானுந்தாண்டா. எனக்கும் அதாண்டா ஆசையாய் இருக்கு. ஆனு அந்த 'உல்ப்' இருக்கான் பாரு, அவன் சும்மா என்னைக் கேலி பண்ணிண்டே இருக்காண்டா! நீ அவனை எப்படி யாவது ஒரு நாளைக்கு நன்னு மட்டந்தட்டி அழ வைக்கணும்டா!"

"உம், பார்க்கலாம்!" என்ருன் ஜக்கு.

"எல்லாம் சரிதாண்டா ஜக்கு, நீ உங்க ஊரிலே போய்ப் படிக்கிறதைவிட இங்கேயே என் பள்ளிக்கூடத்துலே சேர்ந்து விடேன்" என்ருன் நந்து.

ஜக்குவுக்கும் ஆசையாய்த்தான் இருந்தது. ஆனல் அவனுடைய அப்பா விடமாட்டாரே. அப்படியே விட்டாலும் இன்னொரு கஷ்டம் இருக்கிறதே. யாரோ தினம் ஒரு தடவை அவனை நிஜ டெலிபோனில் கூப்பிட்டு, "எங்கே போனே? ஏன் போனே?" என்றெல்லாம் மிரட்டிக்கொண்டே இருக்கிருர்களே! அதை நினைத்ததும் ஜக்குவுக்குப் பயமாய் இருந்தது. நந்துவிடம் இதை ஒரு நாள் அவன் சொல்லிவிட்டான். அதன் பிறகுதான் அவனுக்கு ஆறுதலாய் இருந்தது.

"அடே, இப்படி மிரட்டுவது யாராய் இருக்கும்?" என்று கேட்டான் நந்து.

"தெரியல்லியேடா" என்ருன் ஜக்கு. யார் என்று அவனல் ஊகித்துப் பார்க்கவே முடியவில்லை.

நந்து அநுதாபப்பட்டான். படிப்பில் ஜக்கு எப்படியோ நந்துவுக்குத் தெரியாது. ஆனல் அவன் எல்லாவற்றிலும் கெட்டிக்காரன் என்று நந்து எண்ணினுன். ரொம்பத் தைரியசாலி

என்பதையும் கண்டான். அவனோடு சிநேகமாய் இருப்பதே ஒரு பெரிய தெம்பாய் இருந்தது. ஜக்குவை இப்படி யாரோ ஒருவன் ஒன்றிலும் புத்தியை ஓடவிடாமல் அடிக்கடி 'காபரா' பண்ணிக் கொண்டிருக்கிறானே. இதுதான் நந்துவுக்கு வருத்தம். ஜக்குவைச் சதா விட்டுப் பிரியாமல் இருப்பதைப் பார்த்த நந்துவின் சிற்றப்பா நந்து கீழே வந்ததும், "யாரடா அந்தப் பையன்? அவனை இங்கே கூட்டிக்கொண்டு வாடா, பார்ப்போம்" என்றார்.

நந்து ஓடிப்போய் ஜக்குவை அழைத்து வந்து அவர் முன் நிறுத்தினான். அவர், "உன் பேர் என்னடா, பையா?" என்று கேட்டார்.

ஜக்கு பட்டென்று, "ஜகந்நாத்" என்றான்.

"எந்தக் கிளாஸ் படிக்கிறே?"

"ஸெவன்த் போகப் போறேன்."

"உங்க தஞ்சாவூரிலே இருக்கிற பழைய அரண்மனையை யெல்லாம் பாத்திருக்கயா?"

"ஓ!"

"அங்கே சுரங்க வழி ஒண்ணு இருக்கே!"

"ஓ! அதுக்குள்ளேயும் போயிருக்கேன்!"

"உங்க ஊரிலே என்னமோ விசேஷமானது என்பார்களே!"

"பெரிய கோயில்!"

"எஸ்! டக், டக்கென்று பதில் சொல்கிறாயே; பேஷ்! ஆனா, உனக்குத் தினம் யாராவது டெலிபோன் பண்ணுவதுண்டா?"

இப்படி அவர் கேட்டதும் ஜக்கு திடுக்கிட்டான். இவருக்கு இந்த விஷயம் எப்படித் தெரியும்? இவர் இரவு நேரங்களில் அவன் மாமாவிடம் வந்து அரட்டையடித்துவிட்டுப் போவதுண்டு. அதைத் தவிர, பகல் நேரங்களில் வீட்டிலேயே அவரைப் பார்க்க முடியாது. அவர் விமான நிலையத்தில் 'பிளையிங் கிளப்' அங்கத்தினர். விமானம் ஓட்டக் கற்றுக்கொள்கிறார். அவன் மாமாவுக்கே தெரியாத விஷயம் இவருக்கு எப்படித் தெரிந்திருக்கும்! ஒரு சமயம் இவரே டெலிபோன் பண்ணுகிறாரோ? இல்லாவிட்டால் நந்து எல்லாவற்றையும் சொல்லியிருப்பானோ? சே, நந்து இப்படி ஒரு நாளும் சொல்லிக்கொடுக்க மாட்டான்.

ஜக்கு திடீரென்று பேச்சை மாற்றி, "சார், சார்! என்னை ஒரு நாளைக்கு ஏரோப்பிளேனில் ஏற்றி ஊரெல்லாம் ஒரு தடவை சுற்றிக் காட்டுங்கோ, சார்!" என்றான்.

நந்துவின் சிற்றப்பா கடகடவென்று சிரித்தார். அசல் அது அந்த டெலிபோன் சிரிப்புப் போலவே இருந்தது. ஜக்கு விக்கிப் போய் நின்றான்.

"உன் மாமாவைக் கேட்க வேண்டாமா?"

ஜக்கு தலையை ஆட்டினான். அந்த ஆட்டலுக்கு எப்படி வேண்டுமானாலும் அர்த்தம் செய்துகொள்ளலாம். நந்துவோ, "அடேய் ஜக்கு, மயக்கமா வரும்டா; தலையைச் சுத்தும். வாந்தி எடுக்கும். வேண்டாம்டா" என்றான்.

ஜக்கு அதற்கும் தலையை ஆட்டினான். நந்துவின் சிற்றப்பா ஜக்குவை அருகில் அழைத்து அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார்.

"பயப்படாதே, நாளைக்கே நான் உன்னை ஏரோப்பிளேனில் ஏற்றிச் சுத்திக் காண்பிக்கறேன். நந்து பயப்படுவான். அவன் கீழேயே நின்று வேடிக்கை பார்க்கட்டும்" என்றார்.

ஜக்குவின் சந்தேகம் குன்றியது. டெலிபோனில் பேசுபவராக இருந்தால் இப்படி ஒப்புக்கொள்வாரா? நிச்சயம் அது வேறு யாரோ தெரியவில்லை.

மறுநாள் காலை பதினொரு மணிக்கு ஜக்கு ஜம்மென்று டிரஸ் செய்துகொண்டான். எதிர்ப் பங்களா வாசலில் நந்துவின் சிற்றப்பாவும் நந்துவும் புறப்படத் தயாராக இருந்தனர். நல்ல வேளை, ஜக்குவின் மாமா ஆபீசுக்குப் போய்விட்டார். மாமி இவன் எங்கேயோ புறப்படத் தயாராவதைக் கண்டு, "வெயிலில் இப்படி அலைந்தால் உன் உடம்புக்கு ஆகுமாடா?" என்று கேட்டாள்.

மாமியிடம் அவன், "இன்னிக்கு மட்டுந்தான் மாமி! நான் பார்க்காத தெல்லாம் பார்த்துவிட வேண்டாமா? ஊருக்குப் போனால் அங்கே இதெல்லாம் எப்படிப் பார்க்க முடியும்? மாமாவிடம் சொல்ல வேண்டாம், மாமி!" என்று கெஞ்சுத லாகக் கேட்டான்.

மாமி சம்மதித்து விட்டாள். ஜக்குவுக்கு ரொம்பக் குஷி! குதித்துக்கொண்டே பெல்ட்டை மாட்டிக் கொண்டான்.

"ட்ரிங்...ட்ரிங்...கிணு...கிணு...!"

ஜக்குவின் குஷியெல்லாம் இந்த டெலிபோன் ஒலிக்க ஆரம்பித்ததும் பறந்துவிட்டது. 'பூசை வேளையில் கரடியா?

சேச்சே!' என்று சொல்லிக்கொண்டே டெலிபோனண்டையில் போனுன். டக்கென்று ரிஸீவரை எடுத்தான். காதில் வைத்துக் கேட்காமலே மேஜைமீது பொத்தென்று வைத்துவிட்டுக் கீழே இறங்கி வந்துவிட்டான். "டெலிபோன் மணி அடித்ததே, நீ பேசினுயா?" என்ருள் மாமி. "ஆமாம்" என்ருன் ஜக்கு.

"கிரிக்கெட் விளையாடவா போகிருய்?" என்று கேட்டாள் மாமி சிரித்துக்கொண்டே.

ஜக்கு சிறிதும் யோசனையின்றி, "ஆமாம்" என்ருன்.

"மட்டை எடுத்துக்கொள்ள வேண்டாமா?"

"வேண்டாம்; கிளப்பிலேயே நல்ல மட்டை இருக்கிறது. இதைப் புதிதாக ஊருக்கு எடுத்துக்கொண்டு போகப்போகிறேன்" என்ருன் சமாளித்துக்கொண்டு.

மாமி அதற்குமேல் அவனைக் கிண்டிக் கேட்காமல் கையில் ஓர் ஆப்பிள் பழத்தைக் கொடுத்தாள். ஜக்கு அதைக் கடித்துத் தின்றுகொண்டே வாசலில் ஓடினுன்.

'ஏரோடிரோமு'க்குப் போகும் வழியில் நந்துவின் சிற்றப்பா விடம், "ஏரோப்பிளேன் எப்படிப் பறக்கிறது, எவ்வளவு நாளில் அதை ஓட்டக் கற்றுக்கொள்ளலாம், அமெரிக்காவுக்கும் லண்ட னுக்கும் போக எவ்வளவு நாட்கள் பிடிக்கும், நடுவில் எங்கே எங்கே இறங்கவேண்டும்?" என்றெல்லாம் கேட்டுக்கொண்டே போனுன். அவரும் சளைக்காமல் பதில் சொல்லிக்கொண்டே வந்தார்.

"சபாஷ்! நந்துவைப்போல அசட்டுப் பிசட்டு என்று கேட்காமல் இந்த மாதிரிக் கேட்கிருயே; கெட்டிக்காரப் பயலடா நீ!" என்ருர் அவர்.

"நந்துவும் கெட்டிக்காரன்தான், சார்" என்ருன் ஜக்கு, விட்டுக் கொடுக்காமல்.

நந்துவோ தானும் ஏதாவது கேட்டுத் தன்னுடைய கெட்டிக்காரத்தனத்தையும் காட்ட நினைத்தான். "சித்தப்பா, ஏரோப்பிளேன் போற வழியிலே தொப்பென்று 'விங்' ஒடிந்து விழுந்துவிட்டால் என்ன ஆகும், சித்தப்பா?" என்று கேட்டான்.

இருவருக்கும் சிரிப்புத்தான் வந்தது.

"பார்த்தாயா, இவன் கெட்டிக்காரத்தனத்தை!" என்ருர் சிற்றப்பா,

ஜக்கு சிரித்தான். நந்துவுக்கு உடனே கோபம் வந்து விட்டது. "இதுக்கு என்னடா சிரிப்பு?" என்ருன்.




விமான நிலேயம் வந்தது. வரிசையாக விமானங்கள் நின்றன. ஒன்று விர்ரென்று சுற்றிக்கொண்டு புறப்படத் தயாராய் இருந்தது. மற்ருென்று கீழே வந்து ஒரு 'ஜர்க்' கொடுத்துத் தரையில் இறங்கி நின்றது. அடேயப்பா! எவ்வளவு பெரிய மைதானம்! எவ்வளவு விமானங்கள்! ஓர் ஆள் கையை ஆட்டிக் காண்பிப்பதும் பைலட் தலேயைமூடி, கண்ணுடி போட்டுக்கொண்டு கம்பீரமாய் உட்கார்ந்திருப்பதும் ஜக்குவுக்குப் பிரமிப்பாய் இருந்தன. நந்துவின் கோபம் இன்னும் தணியவில்லே. ஜக்குவுக்குச் சுற்றிலும் எதைப் பார்த்தாலும் அதிசயமாய் இருந்தது. பளபளவென்று சிலர் துடைப்பதும், பிரயாணிகள் ஏறுவதும் இறங்குவதும் பார்த்துக்கொண்டே இருக்கலாம்போல் இருந்தன. கடைசியில் அங்கே இருந்த கான்டீனில் டிபன் பண்ணிவிட்டு அவர்கள் 'பிளேயிங் கிளப்' புக்குள் நுழைந்தார்கள்.

அடுத்த அரை மணிக்கெல்லாம் ஜக்கு ஒரு சிறிய ஏரோப்பிளேனில் உட்கார்ந்திருந்தான்: நந்துவின் சிற்றப்பாவுங் கூட உட்கார்ந்திருந்தார். நந்து, கிளப் வாசலில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து ஏரோப்பிளேன் சுற்றி, எழும்பி, கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து செல்வதைப் பார்த்துக்கொண்டே இருந்தான். அவனுக்குத் தான் பறப்பதைவிட அவர்கள் பறந்து சென்றதுதான் ஆனந்தமாக இருந்தது.



சாயங்காலம் ஜக்கு ரொம்ப நல்ல பிள்ளையைப்போல் வீட்டுக்குள் வந்து நுழைந்தான். கையில் ஒரு பெரிய பொட்டலம் இருந்தது. ஜக்குவின் மாமா இன்னும் வீட்டுக்கு வரவில்லை. ஜக்கு காபியைக் குடித்துவிட்டு மாடிக்குப் போனதும் டெலிபோன் மணி ஒலித்ததும் சரியாக இருந்தன. மேஜைமீது இருந்த ரிஸீவர் டெலிபோன் மேலேயே இப்போது இருந்தது.

"ஹல்லோ ஜக்கு!" என்றது குரல்.

"ஏன்?" என்றுன் ஜக்கு, எரிச்சலுடன்.

"மத்தியான்னம் மாமியிடம் கிரிக்கெட் விளையாடப் போவதாகச் சொல்லிவிட்டுப் போனுயா?"

"ஆமாம்."

"கிரிக்கெட் விளையாடினுயா?"

"ஆமாம், விளையாடினேன்!"

"பொய் சொல்கிருய் என்கிறேன். என்ன, சரிதானு?"

"இல்லே; நிஜந்தான் சொல்கிறேன்."

'நீ, நந்து, நந்துவின் சித்தப்பா மூவருமாய் ஏரோட்ரோமுக்குப் போனீர்கள். உண்டா, இல்லேயா?"

ஜக்கு பதில் சொல்லவில்லே. 'இதென்னடா, பெரிய வம்பாய் இருக்கிறது: இது யார்? கதைகளில் வருமே, அதைப்போல், பூதமாய் இருக்குமோ?' என்று எண்ணிவிட்டுத் தைரியமாய் "இல்லே; நான் கிரிக்கெட் விளேயாடத்தான் போனேன்" என்ருன்.

"விமான கிளப் ரிஜிஸ்தரில் உன் பெயர் இருந்தால்—? போலீஸில் உன்னே ஒப்படைக்கலாமா?"

"ஆமாம்; என்னே மன்னிச்சுடுங்கோ. நான் தெரியாமல் பொய் சொல்லிவிட்டேன்."

"இனிமேல் பொய் சொன்னுல் என்ன நடக்கும் தெரியுமா?"

"தெரியாது!"

"பொய் சொன்னுல் அன்றிரவே ஊருக்குப் புறப்படும்படியாகும்!"

"சரி; எனக்குக்கூட இனி இங்கே இருக்கப் பிடிக்கவில்லே. ஊருக்குப் போய்விடுகிறேன்" என்ருன் ஜக்கு முடிவாக.

"ஆமாம், அப்படியாளுல் செலுலாயிடு பொம்மை வாங்கி விட்டாயா?"

"வாங்கிவிட்டேன்."

டக்கென்று பேச்சு நின்றது. ஜக்கு கட்டிலில் உட்கார்ந்து பெருமூச்சு விட்டான். கடைசியில் ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவனுகப் படுக்கையை எடுத்துக்கொண்டு கீழே வந்தான்.

# 4

## பொம்மையைக் காணோம்

"மாமீ......ஈ......ஈ" என்று உரக்கக் கூப்பிட்டான் ஜக்கு.

வாசல்புறத்தில் அவன் மாமா வந்திருந்தார். அவருடன் மாமி பேசிக்கொண்டு நின்றாள். மாமா அவனிடம், "ஏண்டா ஜக்கு, வருகிற திங்கள்கிழமை எல்லா ஸ்கூல்களையும் திறக்கிறார்களாமே?" என்றார்.

"சரிதான்; பள்ளிக்கூடம் திறந்தால் என்ன? இவன் ஒரு வாரம் கழித்துத்தான் போகட்டுமே" என்றாள் மாமி.

இந்த மாமிக்கும் அவன் அம்மாவுக்குந்தான் எவ்வளவு வித்தியாசம்? சும்மா அவனை அவன் அம்மா, "தேங்காய் வாங்கிக்கொண்டு வா; மாங்காய் வாங்கிக்கொண்டு வா!" என்று ஏதாவது தொணதொணத்துக்கொண்டே இருப்பாள். ஆனால் இந்த மாமியோ அதற்கு நேர் எதிரிடை. பேசாமல் நந்து சொல்கிற மாதிரி பட்டணத்திலேயே இருந்து படித்தால் எவ்வளவு ஜோராய் இருக்கும்!

காலையில் நந்து வந்து, "அடுத்த வருஷம் முதல் ஜக்கு இந்த ஊரிலேயே படிக்கப் போறானாமே, மாமி. உண்மைதானா?" என்று கேட்டான்.

"அடுத்த வருஷம் என்ன, இப்பவே சேர்க்கவேண்டும் என்று தான் எனக்கு. ஆனால் பாதிப் படிப்பில் சேர்க்கிறது எவ்வளவு கஷ்டம்!" எனறாள் மாமி.

இந்தப் பதில் நந்துவுக்குத்தான் ரொம்ப ஆனந்தத்தைக் கொடுத்தது. அவன், 'ஏண்டா ஜககு, நீ கீழே இநத அறையில் படுகையைக் கொண்டு வைத்து இருப்பதற்கு மாமா ஒண்ணுமே கேட்கல்லையா?" என்றான்.

"இல்லை."

"மாமியும் கேட்கல்லையா?"

"இல்லை."

"அடேய், நீ சந்தோஷமாய் இருப்பதற்கு பதில் ஏன் இப்படி மூஞ்சியைத் தூக்கி வச்சுண்டிருக்கே, சொல்லேன்!"

ஜக்கு ஜேபியிலிருந்து ஒரு துண்டுக் கடிதத்தை அவனிடம் நீட்டி, "இதைப் படித்துப் பார்" என்றான். நந்து ஆவலுடன் அதைப் பிரித்துப் பார்த்தான்: 'டெலிபோனுக்குப் பயந்து நீ கீழே போய்விட்டாய். ஆனால் என்னிடமிருந்து நீ தப்ப முடியாது. எதற்கும் ஜாக்கிரதை!'

"நான் தூங்கி எழுந்தபோது என் தலைமாட்டில் இருந்தது இது" என்றான் ஜக்கு. நந்துவுக்கு ஒன்றுமே தோன்றவில்லை.

அன்றைக்குப் பொது விடுமுறை நாள். மணி பதினொன்று இருக்கும். மரீனா பீச்சில் உள்ள 'ஸ்விம்மிங் பூல்' திமிலோகப் பட்டது. பையன்களுடைய அட்டகாசம் தாங்க முடியவில்லை. அதோ மேல் கட்டையிலிருந்து கரணம் போட்டுக் குதிப்பது யார்? ஜக்குவா? இதோ அதைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருப்பது? ஆமாம்; நந்துதான்.

"அடே ஜக்கு. இங்கே வாயேன்; இங்கே வாயேன்!" என்று கரையில் இருந்தபடியே அலறினான் நந்து.

இப்படி ஒரு கைமாற்று, அப்படி ஒரு கைமாற்று; ஜக்கு கரையேறி வந்தான்.

"இந்தப் பசங்களெல்லாம் உன்னை ஒரு மாதிரியாப் பார்க்கறாங்கடா ஜக்கு. அதோ, நீல நிக்கரும் பூனைக் கண்ணும் செம்பட்டைத் தலையுமாய், 'அந்தர்' அடிக்கிறானே, அவன் தாண்டா 'உல்ப்'. அவன் உன்னோடே போட்டி போடப் போறானாம்" என்றான் நந்து.

"வரட்டும்டா பாத்துக்கிறேன்" என்று சொல்லிவிட்டு ஜக்கு ஓடிப்போய், 'கரணம் போடுரு ராஜா, போடு கரணம்' என்று சொல்லிக்கொண்டே கட்டையிலிருந்து கும்மென்று குதித்தான்.

கரையோரமாய் விளிம்பைப் பிடித்துக்கொண் டிருந்த பையன்கள் 'ஹோ!' என்று கூச்சல் போட்டார்கள். "டேய், தஞ்சாவூர்ச் சிங்கம் கரணம் போடறதைப் பாருங்கடோய்! பிச்சைக்காரக் குறவன் இழுத்துண்டு வர குரங்குக்குட்டி கரணம் அடிக்கிறது போல!' என்று கேலி செய்தார்கள்.

உல்ப் அடித்தொண்டையில் வீல் என்று கத்தினான். "(அ)சிங்கம் எங்கேடா காணோம்?"

நோஞ்சல் பூனையைப்போல் இருந்த ஒரு பையன், "முழுகியே போகப் போறான்போல் இருக்கடா, பட்டிக்காட்டுச் சிங்கம்" என்று உயிரைப் பிடித்துக்கொண்டு கத்தினான். விலா எலும் பெல்லாம் விம்மிப் புடைத்துக்கொண்டது.

"அடேடே, உசிரை விட்டுடாதேடா, பாவி! நீ கத்தறதைப் பார்த்தா மேலே போகிற மூச்சு, கீழே வராமலே போய்விடும் போல் இருக்கேடா" என்றான் நந்து, துறை ஓரமாய் வந்து. அவனுக்கு மூழ்கிய ஜக்கு வெளிப்படாமல் இருக்கிற ஆத்திரம், பையன்களுடைய கேலியைத் தாங்க முடியாத ரோசம். உல்ப் கோஷ்டியிடம் சகிக்க முடியாத வெறுப்பு. அந்த ஆத்திரத்தினால் காலை உதைத்துக் கொண்டான்.



"தஞ்சாவூரிலே 'ஸ்விம்மிங் பூ'லைப் பார்த்திருந்தாத்தானே?" என்று கதறினான் சோனி.

"அடே, எனக்குத் தெரியும்டா கபாலி; அங்கே எருமை குளிப்பாட்டற குட்டை இருக்குடா" என்றான் உல்ப். ஒரே கைதட்டல், விசில், ஆரவாரம். நந்துவுக்கு வந்த கோபத்தில் தண்ணீரில் குதித்து இந்தப் பையன்களை ஒரே அறையாக



அறைய வேண்டும்போல் இருந்தது. ஆனால் அவனுககுத் தண்ணீரில் இறங்கியே பழக்கமில்லையே!

"டேய், டேய்!" என்று பயங்கரமாய் அலறினான் உல்ப். கபாலி உடனே பெரிய பலசாலியைப்போல அவன் கையைப் பிடித்துக்கொண்டான். ஆனால் முதலை பிடித்து இழுப்பதுபோல் தண்ணீருக்குள் யாரோ தன் காலை வாரி இழுப்பதை உணர்ந்தான் உல்ப். அவன் 'தத்தக்கா பித்தக்கா' என்று தத்தளித்துக் கொண்டே நடுத் தண்ணீருக்கு இழுத்துப் போகப்பட்டான். கபாலியும் அவனுடன் கதறிக்கொண்டே தடுமாறினான். நந்து ஆரவாரம் செய்தான். மூச்சுத் திணறுகிற சமயத்தில்தான் உல்பைப் பிடித்திருந்த பிடி நழுவியது. எல்லாம் இரண்டு மூன்று நிமிஷங்கள்தான். ஜக்குவை அக்கரையில் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஆனால் கட்டைமேல் பாட்டுச் சத்தம் கேட்டது.

"*ஓநாயின் ஊளையைக் கேட்டீங்களோ, கேட்டீங்களோ...ஓ...ஓ!*" என்று பலீன் சடுகுடு ஆடுவதுபோல ஜக்கு பாடிக்கொண்டே தண்ணீரில் குதித்தான்.

உல்ப் திணறிக்கொண்டே கரைக்கு நீந்தி வருவதும் ஜக்கு குதிப்பதும் ஒன்றாய் இருந்தன. 'பொதக்கடீர்' என்று உல்பின் மேல் குதித்தான் ஜக்கு. உல்ப் எப்படியோ சமாளித்துக் கொண்டான். பூனைக் கண், புலிக்கண்போல் உருட்டி விழித்தது. சீறிப் பாய்ந்தான் முழு வேகத்துடன். ஜக்கு வெளிப்பட்டதும் அவன் தலைமயிரைப் பிடித்துக்கொண்டான். "எலே பட்டிக் காட்டுப் பையா? உடம்பு 'நமு நமு'ன்னு ஊறுதோ?" என்று சொல்லிக்கொண்டே தண்ணீருக்குள் ஓர் அழுத்து அழுத்தினான். சோனிக் கபாலி இன்னும் கரைக்கு வந்து சேரவில்லை. மற்றப் பையன்கள் மட்டும் கரகோஷம் செய்தனர். உல்பின் கோபம் அவர்களுக்கு ஓர் ஒப்பற்ற காட்சி.

நந்து கரையிலிருந்தபடியே காற்றில் கையை உதறிக்கொண்டிருந்தான். ஆனால் என்ன செய்வது? ஜக்கு மேலே வருவதும் 'உல்ப்' மறுபடி கீழே அமுக்குவதும் இரண்டு மூன்று தடவை ஆயின.

"காமிரா இருந்தால் போட்டோப் பிடீங்கடா! கப்பல்லே போட்டோ போட்டாப்பலே இதையும் போடட்டும்டா" என்று உறுமினான் உல்ப்.

ஒரே விநாடிதான். அடுத்த கணம் உல்ப் வாயைப் பிளந்து ஊளையிட்டான். தண்ணீருக்குள் இருந்தபடியே அவன் காலைப் பிடித்து ஒரே வாராக வாரியெடுத்துக் கவிழ்த்து விட்டான், ஜக்கு.

"அடே, உன் ஜோலிக்கு இனி வரல்லே, வரல்லே" என்று கதறினான் உல்ப்.

சோனி கரைக்கு வரமுடியாமல் தவித்துக்கொண் டிருந்ததைக் கண்ட ஜக்கு, ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவனை இழுத்துக் கரையில் தள்ளினான். "மிஸ்டர் சோனி, குரங்குக் குட்டியைப் பார்த்தியா? அந்தக் குரங்கு கரணமும் போடும்! உன் உயிரையும் காப்பாத்தும், தெரியுமா?" என்றான் ஜக்கு.

"யாரப்பா இங்கே ஜக்கு?" என்று கேட்டுக்கொண்டே காவற்காரன் வந்தான்.

"ஏன்?" என்றான் ஜக்கு.

"போன் வந்திருக்குது."

ஜக்குவும் நந்துவும் அதற்குமேல் அங்கே ஏன் நிற்கிறார்கள்? போன் மூலம் யார் பேசுவார்கள் என்பது அவர்களுக்குத் தெரியாதா?

மத்தியான்னம் ஜக்கு காமிரா அறையில் படுத்துக்கொண் டிருந்தபோது வெளியில் பேச்சுக் குரல் கேட்டது. எழுந்து வந்து பார்த்தான். அப்போது உல்பும் சோனிக் கபாலியும் அவன் வீட்டினுள்ளிருந்து வெளியே போய்க்கொண் டிருந்தார்கள்.

சற்றுப் பொறுத்து அவன் எதிர்பார்த்தபடியே மாமி வந்து அவனை மாமா அழைப்பதாகக் கூப்பிட்டாள். ஜக்கு நேராக மாடிக்குப் போனான். அங்கே மேஜையைக் கவனித்தான். 'சொரக்' என்றது. அவன் ஊருக்குக் கொண்டுபோக வாங்கி வந்திருந்த 'கண்ணை மூடித் திறக்கும்' செலுலாயிடு பொம்மையைக் காணவில்லை. அதை மூடியிருந்த காகிதம் மட்டும் கீழே கசங்கிக் கிடந்தது.

"பொம்மை எங்கே?"

"ஏது பொம்மை?" என்றார் மாமா.

"நானும் பார்க்கவில்லையே" என்றாள் மாமி.

"இங்கே இரண்டு பையன்கள் வந்தார்களே?" என்று கேட்டான் ஜக்கு.

"ஒருவரும் வரவில்லையே?" என்றாள் மாமி.

"நான் அவர்கள் வெளியில் போனதைப் பார்த்தேனே!"

"எங்களுக்குத் தெரியாது,"

ஜக்கு விக்கிப்போய் நின்ருன். மாமா அவனிடம், "உன்னே எதற்குக் கூப்பிட்டேன், தெரியுமா?" என்ருர்.

"எனக்குத் தெரியாது. ஆனல் நான் இன்னிக்கி ராத்திரியே ஊருக்குப் போகப் போறேன்" என்ருன் ஜக்கு முந்திக்கொண்டு.

"அப்படியா?" என்ருள் மாமி.

"ஆமாம்; நான் முடிவு செய்துவிட்டேன். இனிக் கோடை லீவின்போதுதான் திரும்பி வருவேன்" என்ருன் ஜக்கு.

அதற்கு ஒருவரும் பதில் சொல்லவில்லே.

மாமியும் ஜக்குவும் வீட்டில் ஓர் இடம் பாக்கி யில்லாமல் பொம்மையைத் தேடினர்கள். பொம்மையைக் காணவே காணும். யார் இவ்வளவு தைரியமாய் எடுத்துப் போயிருப் பார்கள்?

இதை நந்துவிடம் சொல்வதற்கு ஜக்கு வெளியில் போனன். மாமி தேடி அலுத்துப்போய் மாடிக்குப் போனள். ஜக்கு திரும்பி வந்ததும் அவன் படுக்கையில் ஒரு காகிதம் செருகி வைத்திருந்தது.

"அடேய் ஜக்கு, பொம்மையைத் தேடாதே. என்னிடந்தான் இருக்கிறது பொம்மை. இன்று இரவு ஊருக்குப் போகப்போவ தாகத் தெரிகிறது. எங்கே பார்க்கலாம்" என்றும் அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது. பின்குறிப்பு என்று அடியில் ஒரு வாக்கியம் காணப்பட்டது. அதில், "இன்றைக்கு ஸ்விம்மிங் பூலில் நடந்தது எனக்குத் தெரியும்" என்றுதான் எழுதி யிருந்தது.

"ஊருக்குப் போகப் போவதாகத்தான் இருந்தேன். ஆனல் இது யாரென்று கண்டுபிடிக்காமல் போகப் போவதில்லே" என்று சொல்லிக்கொண்டான் ஜக்கு.



# 5

## இருளில்

ஜக்கு எப்போதுமே இப்படித்தான். எதையாவது அவசரப் பட்டுக்கொண்டு சொல்வது, பிறகு அதை செய்வதற்குத் திண்டாடுவது. ஆனால் இன்று அவன் மாமி அவனைத் திண்டாடும்படி விடவில்லை. ''எல்லாம் திங்கள்கிழமை ஊருக்குப் போகலாம்'' என்று சொல்லிவிட்டாள்.

அவனுடைய மாமாவும், ''டேய், இன்னும் இரண்டு நாளில் 'கிளப்' பையன்கள் ஒரு டிராமா போடப் போகிறார்களாம். அதைப் பார்த்துவிட்டுப் போகலாம்'' என்றார்.

ஜக்குவுக்குத் தன் ஊரிலும் இதேபோல் ஒரு 'கிளப்' ஆரம் பித்து டிராமாவெல்லாம் நடதத வேண்டும் என்று எண்ணம். ஆகவே இந்த டிராமாவை அவசியம் பார்க்க எண்ணி, ''என்ன டிராமாவாம், மாமா?'' என்று கேட்டான்.

''இதோ பார் நோட்டீசை! யாரோ பையன்கள் கொண்டு வந்து வைத்துவிட்டுப் போயிருக்கிறார்கள்போல் இருக்கிறது!'' என்று அவனிடம் ஒரு பிட் நோட்டீஸைக் காண்பிததார்.

''பள்ளிக்கூடத்துக்கு மட்டம்: ஒரு ஹாஸ்ய நாடகம். நடிகர்கள்: நந்து, உல்ப், கபாலி (சோனி); மற்றும் பலர். ஞாயிறு மாலை 5 மணிக்கு ஆரம்பம். கட்டணம்: பைசா 25, 20, 15, 10.''

இதைப் பார்த்ததும் ஜக்குவுக்கு ஆச்சரியமாய் இருந்தது; கோபமாக வந்தது. இதற்காகத்தான் உல்பும் சோனியும் வந்து விட்டுப் போயிருக்கிறார்கள் என்று தெரிந்துகொண்டான். 'பார்த்தாயா, இந்த நந்துப் பயல் நம்மோடு கூடவே இருந்து கொண்டு, நாடகத்தில் நடிக்கப் போவதாகச் சொல்லவே இல்லையே!' என்று வெறுப்பாகவும் இருந்தது.

இந்தச் சமயத்தில் ஜக்குவுக்கு ஒரு விஷயம் பளிச்சென்று ஞாபகத்துக்கு வந்தது. 'நந்து மட்டும் ரொம்ப நல்லவன் என்று எப்படிச் சொல்வது? எப்போது டெலிபோன் மணி அடித்தாலும் அப்போதெல்லாம் நந்து அவனுடன் இருப்பதில்லை. கடிதம் எழுதி வைத்திருப்பதும் நந்து இல்லாத சமயங்களில்தான். ஒருகால் இந்த நந்துவுக்கு அதில் பங்கு ஏதாவது இருக்குமோ? ஏன்

இருக்கக்கூடாது? ஸ்விம்மிங் பூலில் இருந்தபோது டெலிபோன் வந்ததே—அப்போது வேறு யாரோ கூப்பிட்டார்களே?'

ஜக்குவுக்குச் சந்தேகம் வலுத்துக்கொண்டே வந்தது. பல தடவை டெலிபோன் வந்த சந்தர்ப்பங்களையெல்லாம் நினைவு படுத்திப் பார்த்தான். சந்தேகமே இல்லை! அந்தச் சமயங்களில் நந்து இருப்பதில்லை:

நந்து இவ்வளவு தூரம் செய்யக்கூடியவனு என்று ஜக்கு யோசித்துப் பார்த்தான். ஹூம்; இந்தக் காலத்தில் யாரைத்தான் நம்ப முடிகிறது? 'பார்த்தால் பசு: பாய்ந்தால் புலி' என்பார்களே, அதுமாதிரி நந்து நாடக விஷயத்தைச் சொல்லாமல் மறைத்துத் தானே இருந்திருக்கிறுன்! இதைச் செய்தவன் என்னவெல்லாம் செய்திருப்பானே? பொம்மையைக்கூட அவனைத் தவிர வேறு யார் எடுத்து மறைத்து வைத்திருக்கப் போகிறுர்கள்?

'இருக்கட்டும். ஐயா கிட்டயா இவர் வேலையைக் காட்டுறுர்? பாக்கறேன் ஒரு கை!' என்று ஜக்கு தனக்குள் சொல்லிக் கொண்டான்.

வழக்கம்போல நந்து வந்ததும் அவனிடம் நாடகத்தைப்பற்றி ஒரு வார்த்தையும் பேசவில்லை. ஆனல் கையில் நோட்டீஸ் இருந்தது. நந்து அதைப் பார்த்துவிட்டு, "என்னடா ஜக்கு, அக்கிரமமாய் இருககு? என் பெயரையும் போட்டிருக்கானுகளே!" என்றுன்.

ஜக்கு கிண்டலாக, "நாடகத்தில் நடிக்கிறவனை நோட்டீஸில் போடாமல இருப்பானு?" என்றுன்.

"எனக்குத் தெரியாமலா? என்னைக் கேட்க வேண்டாமா?"

"எதுக்காக உன்னைக் கேக்கணும்?"

"நான் போய் நடிக்கணுமோ வாண்டாமோ?"

"என்னைக் கேட்டால்?"

"நடிக்கறதுன்னு என்ன என்கிறதே தெரியாதே எனக்கு. என்னை அவமானப்படுத்தறதுக்கு 'உல்ப்' இப்படிச் செய்திருக்கான்!"

ஜக்கு தலையைத் திருப்பிக்கொண்டு, "உனக்குத்தான் பிரமாதமா நடிக்கத் தெரியுமே! அவன் உன்னை அவமானப்படுத்தருனே, நீ அவனை அவமானப்படுத்தறயோ? இல்லை இரண்டு பேருமாச் சேர்ந்து என்னை அவமானப்படுத்தறீங்களோ? போங்கள்!" என்றுன.

நந்து எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் ஜக்குவுக்கு அவனிடம் நம்பிக்கையே ஏற்படவில்லை. தனியாக இருந்தால் தான் ஜக்குவின் கோபம் தணியுமென்று நந்து தன் வீட்டுக்குச் சென்றான்.

இந்த இரண்டு நாட்களுக்குள் டெலிபோனில் பேசுவது யார் என்று கண்டுபிடிக்க வேண்டும்; பொம்மையை எப்படி எடுத்துக் கொண்டு போனார்கள் என்பதைக கண்டு பிடிக்கவேண்டும்; இவ்வளவும் எதற்காகச் செய்கிறார்கள் என்றும் கண்டு பிடிக்க வேண்டும். ஜக்கு யோசனை செய்தான். வெகு நேரம் தன் புத்திக்கு எட்டின வரைக்கும் செய்ய வேண்டியவைகள் பற்றிப் பிளான் போட்டான். பிறகு அப்படியே அயர்ந்து தூங்கிப் போனான்.

எழுந்திருந்தபோது அவன் தலைமாட்டில் ஒரு கடிதம் கிடந்தது: ''மிஸ்டர் ஜக்கு அவர்களே! நந்து உண்மையானவன். உன்மாதிரி ஆபத்துச் சமயங்களில் திடீர் திடீரென்று பெரிய பெரிய புளுகாகப் புளுகித் தப்பித்துக்கொளகிறவனல்ல. அப்படிப் பொய் சொல்லி நீ இதுவரையில ஜயித்துவிட்டாய். இந்தக் கதை எப்போதும் பலிக்காது. அதனால் நந்து ஒருவனிடமாவது உண்மை யுடன் இரு.''

ஜக்குவுக்கு இதைப் பார்த்ததும் சிரிப்புத்தான் வந்தது: ''பயலே, இந்தப் புருடா வேலையெல்லாம் யாருகிட்டே? நம்ம கிட்டயா நடக்கும்?...என்னை யாரென்று எண்ணினாய், பயலே?'' இது நந்துவின் வேலைதான் என்று அவனுக்கு நிச்சயமாகப் பட்டது. போதும் போதாததற்கு அவன் நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்ய இன்னொரு விஷயமும் நடந்தது.

பொம்மையை வாங்கும்போது ஜக்குவுடன் நந்து மட்டுந்தான் இருந்தான். அதன் விலை நந்துவுககு மட்டுமே தெரியும். ஆனால் ராத்திரி, சாப்பிடும்போது அவன மாமா அவனைப் பார்த்து, ''எனன விலைக்கு அந்தப் பொம்மையை வாங்கினாயடா?'' என்று கேட்டார்.

''ஐந்து ரூபாய்!'' என்று சட்டென்று பொய்தான் சொன்னான் ஜக்கு. அவன் வேண்டுமென்று சொல்லவில்லை. வாய் தவறி வந்துவிட்டது.

மாமா சிரித்துக்கொண்டே மாமியிடம், ''பார்த்தாயா, உன் மருமான் சாமர்த்தியத்தை! பத்து ரூபாய் எழுபத்தைந்து பைசா வுக்கு வாங்க வேண்டிய பொம்மையை ஐந்து ரூபாய்க்கு வாங்கி யிருககிறான்! இல்லையாடா, ஜக்கு?'' என்றார்.

ஜக்குவுக்கு முகம் சின்னதாகப் போய்விட்டது. அவ்வளவு விலை கொடுத்து வாங்கின பொம்மை தொலைந்து போய்விட்டது என்றால் மாமா கோபித்துக்கொள்வாரே என்றுதான் விலையைக் குறைத்துச் சொன்னான். ஆனால் இந்த நந்துப் பயல் மாமாவிடம் உண்மை விலையைச் சொல்லிவிட்டான்போல் இருக்கிறது! எவ்வளவு அவமானம்?

"அது கிடக்கட்டும்; பாக்கி உன்னிடம் எவ்வளவு பணம் இருக்கு?"

இதற்குள் ஜக்குவின் மாமி வலை பீரோவிலிருந்து 'பாத் ரூ'மில கிடநததாக ஜக்குவின் மணிபர்ஸை எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

"மணிபர்ஸை இப்படித்தான் அஜாக்கிரதையாக வைத்துக் கொள்வதா? அதில் பணம் சரியாக இருக்கிறதா, பார்!" என்றார்.

ஜக்கு மணிபர்ஸைத் திறந்து பார்த்தான். அதில் சரியாக இருபததிரண்டு ரூபாய் நோட்டுக்கள் இருந்தன.

"பின்னே பொம்மைக்கு எப்படிப் பணம் கொடுத்தாய்?" என்று கேட்டார் மாமா.

ஜக்குவுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. "ஐயையே, பணம் கொடுகக மறந்துட்டு வந்துட்டேன்போல் இருக்கு, மாமா" என்றான்.

ஆனால் மாமாவா அவன் சொல்வதை நம்புவார்? கடகட வென்று சிரித்தார். இந்தப் பட்டணத்திலே எல்லாருமே இப்படித் தான டெலிபோன் சிரிப்பு மாதிரி கடகடவென்று சிரிப்பார்களோ என்று ஜக்குவுக்குத் தோன்றிற்று.

"ஏண்டா, அந்தப் பொண்ணு பணம் அனுப்பியிருந்தாள் என்று சொல்றதுதானே?" என்றார் மாமா விடாமல.

ஜக்குவுக்கு அவமானமாய் இருந்தது. "இல்லே மாமா, வந்து......வந்து......அந்தப் பொண்ணு......இல்லே, மாமா" என்று உளறினான். அவனுக்கு நந்துவின்மேல்தான் ஆத்திரம் வந்தது.

மறுநாள் இரவு பத்து மணி இருக்கும். ஒரே இருட்டு. தூரத்தில் எங்கேயோ ஒரு நாய் குரைததது. மற்றபடி எங்கும் நிச்சப்தம். ஜக்கு தூககம் கொள்ளாமல் இப்படியும் அப்படியு மாகப் புரண்டுகொண் டிருந்தான். 'ஏண்டாப்பா பட்டணத் துக்கு வந்தோம்?' என்றிருந்தது ஜக்குவுக்கு. திடீரென்று முதல் நாள் மத்தியான்னம் போட்ட பிளானுக்கு ஒரு முடிவு உதய

மாயிற்று, அவன் மூளையில். அன்று முழுவதும் அவன் நந்துவின் வீட்டுக்குப் போகவுமில்லை; அவனுடன் பேசவுமில்லை. நாளை நாடகத்தில் நந்து நடித்தால் ஜக்குவிடம் அவன் உண்மையாக நடந்துகொள்ளவில்லை என்றுதான் அர்த்தம். ஆனால் நந்து நடிக்கப்போகிறானா இல்லையா? அவனுக்கு என்ன ஆக்ட்? அந்த வேஷத்துக்குள்ள பாடங்களை நந்து படித்துவிட்டானா? இதை யெல்லாம் உடனே கண்டு பிடித்து விடவேண்டும் என்று ஜக்கு வுக்குப் பட்டது. அதையும் தவிர அவன் மனசில் தனக்கும் ஒரு பார்ட் கிடைத்தால் நன்றாயிருக்குமே என்ற ஆசையும் உண்டா யிற்று. 'இவனுக் கெஞ்சினாலும் நான் ஆக்ட் பண்ணப் போற தில்லே. இருந்தாலும்—' என்று தனக்குள் வீறாப்பாகச் சொல்லிக் கொண்டான்.

நந்துவின் வீட்டில் அவன் அறை மேல்மாடியில் இருந்தது. அந்த அறையில் எங்கே என்ன இருக்கும் என்பது ஜக்குவுக்குத் தெரியும். நந்து வீட்டுக்குப் போய் அவன் விழித்துக்கொண் டிருந்தாலும் விழித்துக்கொள்ளாமல் இருந்தாலும் எப்படியும் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டு வருவது என்று முடிவு செய்தான். உடனே எழுந்திருந்து விளக்கைப் போட்டான். நீல நிஜாரையும் காக்கிச் சட்டையையும் அணிந்துகொண்டான். மெதுவாகச் சத்தம் போடாமல் அடிமேல் அடிவைத்துக் கதவைத் திறந்தான். விளக்கை மீண்டும் பழையபடி அணைத்துவிட்டு வெளியில் புறப்பட்டான். வாசல் கதவுத் தாழ்ப்பாளைத் திறக்கும் போது பின்னால் ஏதோ சத்தம் கேட்டது. சட்டென்று சுவரோர மாய்ப் பதுங்கிக்கொண்டான். இருட்டில் யாரோ நடப்பது போன்ற காலடியோசை மட்டும் கேட்டதே தவிர வேறு ஒன்றும் தெரியவில்லை. அப்படியே மூச்சுக்கூட விடாமல் பத்து நிமிஷம் போல் நின்று கவனித்தான். சத்தமில்லை. சிறிது நேரம் கழித்து மாமாவின் அறையில் தும்மல் சத்தம் கேட்டது. 'சரி, எல்லாரும் தூங்குகிறார்கள்' என்று ஜக்கு கதவைத் திறந்து சாத்திக் கொண்டு வெளிப்பட்டான்.

சிலுசிலு என்று காற்று வீசிக்கொண் டிருந்தது. நக்ஷத் திரங்கள் மின்னின. தெரு விளக்குகள் மங்கலாக எரிந்தன. ஆள் நடமாட்டமே இல்லை. ஜக்கு ஓரமாய் நடந்து சென்றான். நந்து வீட்டுக் காம்பவுண்டுக்குள் நுழையும்போது மெதுவாகத் திரும்பிப் பார்த்தான். திக்கென்றது!

அங்கே விளக்குக் கம்பத்தடியில் யாரோ ஒருவன் நின்று கொண்டிருந்தான். ஜக்கு தோட்டத்துச் செடி நிழலில் பதுங்கிக் கொண்டான்.

திடீரென்று மாடியில் நந்துவின் அறையில் விளக்கு எரிந்தது. நந்து விழித்துக்கொண்டுதான் இருக்கிறான்போல் இருக்கிறது! 'சரி, நேராகவே போகலாமே' என்று ஜக்கு தோட்டப் பக்கப் படியருகில் வந்தான். அதற்குள் விளக்கு அணைந்துவிட்டது. ஜக்கு தயங்கி நின்று வீட்டிலுள்ள மற்றவர்கள் தூக்கம் கெட்டு விடாதபடி மெதுவாக, "நந்து! டேய் நந்து!" என்று குரல் கொடுத்தான்.

பதில் இல்லை.

ஆனால் செடிக்குப் பின்னாலிருந்து யாரோ கனைத்துக் கொண்டே, "யாரது?" என்று கேட்டார்கள். ஜக்குவுக்குச் சர்வ நாடியும் ஒடுங்கிவிட்டது. எதிரே, இருட்டில் வந்தவனுடைய கையில் ஒரு பெரிய தடி இருந்தது. அப்படியே திக்பிரமை யடைந்து நின்றான் ஜக்கு.



## ௬

# நாடகம் நடந்தது

"அடேடே, நம்ம எதிர்வீட்டுக் குழந்தையா? நான் யாரோன்னுல்லே பயந்து போய்த் தடியைத் தூக்கிக்கிட்டு ஓடியாரேன்?" என்றான் தோட்டக்காரன்.

ஜக்குவுக்கு அப்பொழுதுதான் நல்ல மூச்சு வந்தது. "நல்ல காலம். யாரோ என்னமோன்னு ஓங்கின தடியை மண்டையிலே போடாமெ இருந்தாயே!" என்று சொல்லிவிட்டு மாடியை அடைந்தான். ஒரே இருட்டாய் இருக்கவே விளக்கைப் போட்டான்.

தலையணை ஒரு பக்கம், தலை ஒரு பக்கமாய்ப் படுத்துத் தூங்கிக்கொண் டிருந்தான் நந்து. ஜக்கு அவனை எழுப்பவில்லை. படபடவென்று காற்றில் ஏதோ பறக்கவே அவன் பார்வை மேஜை மீது சென்றது. ஜக்கு உடனே அதைக் கையில் எடுத்துப் பார்த்தான்.

நாடகத்தின் கையெழுத்துப் பிரதி அது. நந்து நடிக்க வேண்டிய பகுதிகள் அதில் அடங்கியிருந்தன. அந்த ஹாஸ்ய நாடகத்திலே நந்துவுக்கு ஒரு பட்டிக்காட்டுப் பையனாக நடிக்க வேண்டிய பாகம். ஜக்கு சுற்றுமுற்றும் நன்றாகப் பார்த்தான்; ஏனென்றால் அந்தக் கையெழுத்துப் பிரதியை நந்து பார்த்திருக்க மாட்டான் என்ற சந்தேகம் அவனுக்கு உடனே உண்டாயிற்று. கையெழுத்துப் பிரதியைச் சுருட்டிக் கொண்டுவந்து வைத்திருப்பதால் அது பிரியாமல் அப்படியே இருந்தது. கை வேர்வைகூடக் காயவில்லை.

ஜக்குவுக்கு மின்வெட்டென ஒரு யோசனை உதித்தது. 'எப்படி யிருந்தாலும் இருக்கட்டும் – நந்து பார்த்திருந்தாலும் சரி, பார்க்காமல் இருந்தாலும் சரிதான்!' என்று சொல்லிக் கொண்டான். அந்தக் கையெழுத்துப் பிரதியைக் கையில் சுருட்டி எடுத்துக்கொண்டு விளக்கை அணைத்தான். மடமடவென்று வந்த வழியே திரும்பிவிட்டான்.

வரும்போது தெருவிளக்கடியில் நின்றுகொண் டிருந்தவனை இப்போது காணவில்லை. மெதுவாக வீட்டுக்குள் நுழையப்போகும் சமயம். பங்களா காம்பவுண்டுக்கு வெளியே கசமுச என்று பேச்சுக்குரல் கேட்டது. ஜக்கு ஓரமாய்ப் போய் நின்று காதைத் தீட்டிக்கொண்டான்.

"டேய் உல்ப், அவன் மேஜைமேலே வச்சுட்டு வந்துட்டேனடா!" என்றான் சோனிக் கபாலி.

"அது சரிடா; யாரோ நீ போன பிறகு அங்கே வந்தாப்பலே இருந்ததே, அது யாரு?" என்று கேட்டான் உல்ப்.

"நல்ல வேளை! நீ தோட்டக்காரன்கிட்டே பேச்சுக் கொடுக்காமெ இருந்திருந்தால் நான் தெரியாமெ திரும்பியிருக்க முடியாது!" என்றான் சோனி.

"அட சீ! நான் எங்கேடா தோட்டக்காரன் கிட்டே போய்ப் பேசினேன்? நான் அதோ அந்த விளக்குக் கம்பத்துக்குக் கிட்டேன்னு நின்னேன்!"

"அப்போ நீ இல்லையா பேசினது?"

"ஊஹூம்?"

"சரி; யாராய் இருந்தா நமக்கென்ன? எப்படியோ வந்துவிட்டோம் வெளியிலே. ஆமாம்; நந்து படிக்காமல் இருந்துட்டு, நடிக்கமாட்டேன்னு சொன்னா?" என்று கேட்டான் சோனி.

"அட, உனக்கேண்டா அந்தக் கவலை? நாளைக்குப் பள்ளிக் கூடம் திறந்தா அந்தப் பயல் கிளாஸூக்கு வந்துதானே ஆகணும். அதனாலே நிச்சயம் அவன் 'ஆக்ட்' பண்றானா இல்லையான்னு நீயே பார்! கதறிண்டு 'ஆக்ட்' பண்ணச் சொல்றேன்" என்றான் உல்ப்.

அவ்வளவுதான் ஜக்குவுக்குக் கேட்டது. பிறகு அவர்கள் போய்விட்டார்கள். ஜக்கு தன் அறைக்குள் நுழைந்தான். முதலில் போட்ட பிளான்படியே விளக்கைப் போட்டுக்கொண்டு ஒரு தடவை எல்லாவற்றையும் படித்தான். அதை நந்து நடித்தானே, அவ்வளவுதான்; எல்லாரும் அவனைப் பட்டிக்காட்டு ஏமாளி என்று பரிகாசம் செய்வார்கள். அதுகூடப் பரவாயில்லை. அந்த ஏமாளியாக ஜக்குவையே வைத்துக்கொண்டுதான் எழுதியிருக்கிறார்கள்.

'நந்துவைப் போய்ச் சந்தேகித்தேனே, பாவம்! அவனுக்கும் எனக்கும் மனஸ்தாபம் ஏற்படுத்த இந்தப் பயலுகள் எவ்வளவு சூழ்ச்சிகள் செய்திருக்கிறார்கள்! இவர்களைப் பதிலுக்குப் பதில் அவமானப் படுத்தாவிட்டால் நான் ஜக்கு இல்லை' என்று மார்பைத் தட்டிக்கொண்டான். பேனாவும் காகிதமும் எடுத்து வைத்துக்கொண்டு எதையோ எழுதுவதில் ஒரே மூச்சாக ஈடு

பட்டான். அவன் அன்று தூங்க ஆரம்பித்தபோது சரியாகக் கிழக்கு வெளுத்துவிட்டது.

காலையில் நந்து அவனைப் புரட்டி எழுப்பி, "என்னடா, இன்னும் தூங்குகிறுய்?" என்ருன். ஜக்கு கண் விழித்ததும் நந்துவின் கையைப் பிடித்துக்கொண்டு, "நீதாண்டா உண்மைச் சினேகிதன். உன்னைப் போய் நான் சந்தேகப்பட்டேனே. என்னை மன்னிச்சுட மாட்டாயா?" என்று கேட்டான்.

நந்துவுக்கு ஒன்றும் புரியவில்லை. ஜக்கு அவனிடம் இரவு நடந்ததையெல்லாம் விவரமாகச் சொனஞன். கடைசியாக, "நந்து, நந்து! நான் சொல்கிறபடி கேட்டாயோ, அவனுக முகத்தில் கரியைப் பூசலாம்! என்ன சொல்றே?" என்ருன் ஜக்கு.

"ஓ, நான் ரெடி!" என்ருன் நந்து.

ஜக்கு குதி குதியென்று குதித்தான். பிறகு எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று அரைமணி நேரமபோலத் திட்டம் போட்டார்கள். நந்து எழுந்து போகும்போது, "நீ கவலைப் படாதேடா, ஜக்கு! நான் பார்த்துக்கறேன்!" என்று சொல்லி விட்டு ஜக்கு கொடுத்த கையெழுததுப் பிரதிகளுடன் வீட்டுக்குச் சென்ருன்.

மத்தியான்னம் ஜக்கு வாசற்படியில் உட்கார்ந்து மாமிக்கு விளையாட்டுச் சினிமா காட்டிககொண் டிருந்தான். ஒரு சேமியா அட்டைப் பெட்டியின் நடுவில் ரூபாய் அளவுள்ள பூதக் கண்ணுடியைச் செருகியிருந்தான். பினபுறத்து அட்டையில் ஒரு பிலிம் அளவுக்குச் சதுரமாய் வெட்டிப் பிலிம் சுருளை மாட்டி யிருந்தான. எதிரே நாலுபுறமும் நீலத் துணியால் மறைத்த இருட்டறை. நடுவில் படம் விழும்படி ஒரு வெள்ளைத் துணி. பூதக் கண்ணுடியில் சூரிய பிம்பம் விழும்படி வெயிலில் ஒரு கண்ணுடியைச் சாய்த்து வைததான். அவ்வளவுதான்; எதிரே படம் பெரிதாகத் தெரிந்தது. ஆனுல் சிறிது மங்கலாகத்தான் இருந்தது.

மாமி இதைப் பார்த்து ஆச்சரியப்பட்டாள். "என்னடா ஜக்கு! பிலிமைத் தலைகீழாக வச்சிருக்கயே?" என்ருள்.

"இல்லாட்டா படம் தலைகீழாக விழும், மாமி!" என்ருன் ஜக்கு. அவன் திரும்பிப் பார்ததபோது உல்பும் சோனியும் நந்துவின் வீட்டுக்குள நுழைவது தெரிந்தது. நந்து மாடியில் தன் அறையில் நினறுகொணடு, ஜன்னல் வழியாக ஜக்குவுக்கு மட்டும தெரியும்படி கையை வீசிக காட்டினுன். அதறகு அர்ததம் என்னவென்ருல், 'எல்லாம் ரெடியாகிவிட்டது' எனபதுதான்.

ஜக்கு மறுபடி விளையாட்டுச் சினிமாக் காட்டுவதில் ஈடுபட்டான். மாமிக்கு அவன் ஒவ்வொன்றையும் விளக்கிக் காட்டினுன். "பாட்டரி விளக்கை எடுத்துக்கொள்ளேன்'' என்ருள் மாமி. "அந்த வெளிச்சம் போதாது மாமி'' என்ருன் ஜக்கு.

அப்போது மணி மூன்று. நந்து, உல்ப், சோனி மூவரும் ஜக்குவைப் பார்க்க வந்தார்கள்.

"அடே ஜக்கு! நாங்கள் எல்லாரும் சேர்ந்து இன்னிக்கு எங்க 'கிளப்'பிலே ஒரு டிராமா போடப்போகிருேம். நீ அதற்கு அவசியம் வரணும். வரதோடு மட்டுமல்ல; கொஞ்சம் 'ஹெல்ப்'பும் செய்யணும்'' என்ருன் நந்து.

ஜக்கு ஒன்றுமே தெரியாதவனைப் போல, "டிராமாவா? அடேடே! நீயும் அதிலே 'ஆக்ட்' பண்ணப் போறயா? டேய், சொல்லவே யில்லையே நீ!'' என்ருன்.

"ஆக்ட் பண்ணப்போருனு? அவனுடைய பாகத்தையெல்லாம் தலைகீழாக்கூடச் சித்தே முந்தி 'ஆகட்' பண்ணிக் காட்டிப்பிட்டான். இல்லையாடா, உல்ப்?'' என்று கூவினுன் சோனி.

"உனக்குக்கூட ஒரு பார்ட் கொடுத்திருப்போம். ஆனு நீ ஊருக்குப் போயிடுவியோ என்னமோன்னு கொடுக்கல்லை'' என்ருன் உல்ப்.

'உல்ப்' என்ருல் அசல் 'உல்ப்' மாதிரிதான் அவன் இருந்தான். அவன் செம்பட்டை மயிரும் பூனைக் கண்ணும் புலிப் பல்லும்... அசல் ஓநாய்தான்!

ஜக்கு அவனை மனசுக்குள் கறுவிக்கொண்டே, "நான் அவசியம் வரேன், அஞ்சு மணிக்குத்தானே? நாலரை மணிக்கே வந்துடறேன்! போதுமா!'' என்ருன்.

மணி நாலரை என்ருல் டாண் என்று நாலரை மணிக்கெல்லாம் ஜக்கு கிளப்பில் ஆஜராறுன்.

சிறிசும் பொடிசுகளுமாக முன்வரிசையில் பத்துப் பதினைந்து குழந்தைகள் மட்டுந்தான் இருந்தார்கள். நந்து 'கிரீன் ரூ'மிலிருந்து வெளியே எட்டிப் பார்த்து, "அடேய் ஜக்கு! அடேய்! இங்கே வாயேன்!'' என்று கூப்பிட்டான். அப்போது அவனோடு உல்பும் இருந்தான்.

"வந்து நீ 'ஹெல்ப்' பண்ணணும்னு மத்தியான்னமே சொன்னேனேல்லியோ? நீ பாட்டுக்கு நின்றுகொண்டிருந்தால் என்னடா அர்த்தம்?'' என்று கோபித்துக்கொண்டான் நந்து. கோபத்தினுல் அவன் முகம் நிஜமாகவே சிவந்து கொடுத்தது.

“பின்னே என்னடா பண்றது? ஒரு வேலையும் எனக்கு இல்லையே?” என்றான் ஐக்கு.

“என்னடா இது? வேலையா இல்லை? இதோ பார், டிக்கெட் விற்கிறது! அதுவே வேண்டாம்; ‘கேட்’டிலே நில்லேன். பிரஸ், காம்ப்ளிமென்டரி பார்த்து உள்ளே விட்டு டிக்கெட்டைச் சோதனை பண்ணி அனுப்பக் கூடாதா? இதுலே என்னடா அகௌரவம் வந்துடும் நமக்கு?” என்றான் நந்து.

“சரி; இவ்வளவுதானே? அகௌரவத்துக்காகச் சொல்லலேடா. ஏதாவது தப்பு வந்துட்டா?”

“அப்படி வந்தா வந்துட்டுப் போகட்டும். இந்த வசூலை எல்லாம் நாம்பதானே எடுத்துக்கப் போறோம். ஒண்ணு ரெண்டு போனாத்தான் போயிட்டுப் போகட்டுமே” என்றான் நந்து.

உல்ப் பேசுவதற்கே அவர்கள் இடம் கொடுக்கவில்லை. முதல் மணி அடித்தாகிவிட்டது! ஐக்கு ‘கேட்’டுக்கு ஓடினான்.

ஒரு பத்துப் பதினைந்து பத்துப்பைசா டிக்கெட்டுகள் விற்பனையாகியிருந்தன. வெளியில் பையன்களுடைய கூட்டம். ஒன்றிரண்டு பெரியவர்கள், குழந்தைகள் நடிக்கப் போவதைப் பார்க்க வந்தார்கள்.

இரண்டாவது மணி அடித்தாகிவிட்டது!

புக்கிங் கவுன்டரில் டிக்கெட்டே விற்பனை ஆகவில்லை. ‘உல்ப்’ மட்டும் உள்ளே போய் விநாடிக்கு ஒரு தடவை, ‘எவ்வளவடா விற்றது?’ என்று கேட்டுக்கொண் டிருந்தான். விற்பனை முதலில் ஆனதுதான். பிறகு ஆகவேயில்லை. ஆனால் உள்ளே நேரம் ஆக ஆகக் கூட்டம் மட்டும் அதிகரித்துக் கொண்டே யிருந்தது.

“என்னடா விற்பனை இல்லேங்கறே? இடமே போறுது போல் இருக்கேடா கூட்டம்?” என்று ‘புக்கிங் கிளார்க்’ பைய னிடம் வந்து உறுமினான் உல்ப்.

“என்னமோ தெரியல்லியே!” என்று அந்தப் பையன் கையை விரித்துவிட்டான்.

டண், டண், டண்...மூன்றாவது மணி!

உல்ப், கிரீன் ரூமுக்குப் போய்விட்டான், வேஷம் போட்டுக் கொள்ள. அவனுக்கு ஹெட்மாஸ்டர் வேஷம்! மணி ஐந்தேகால் ஆகியும் ஸீன் இழுக்கவில்லை. கூட்டம் நெரிசலாய் இருந்தது. ஒரே விசில் சத்தமும் சிரிப்பும் கைதட்டலும் ரகளைப்பட்டன.

இதற்குள் 'கோரஸ்' ஆரம்பமாயிற்று. இருந்தாற்போல் இருந்து வாசல் கதவு அப்படியே திறந்துகொண்டது. அணை உடைந்து வரும் வெள்ளம்போல வெளியில் நின்ற அத்தனை பேரும் டிக்கெட்டே வாங்காமல் உள்ளே நுழைந்துவிட்டார்கள். இதைக் கேள்விப்பட்ட உல்ப் தன்னை மறந்து பாதி வேஷத்துடன் வெளியில் வந்து, "ஜக்கு, ஏ ஜக்கூ!" என்று கர்ஜித்தான். பையன்கள் எல்லாரும் 'கொல்' என்று சிரித்துக் கேலி செய்யவே அவமானம் தாங்காமல் அவன் உள்ளே போய்விட்டான். ஜக்குவோ கதவைத் திறந்துவிட்டு ஒரு கோடியில் நின்று சிரித்துக் கொண் டிருந்தான். இதற்குள் ஸீன் இழுத்தாயிற்று.

முதல் ஸீனில் பட்டிக்காட்டு ஏமாளியைக் கூப்பிட்டு ஹெட்மாஸ்டர், "அடே ஏமாளி, எந்த ஊரடா உனக்கு?" என்று கேட்கவேண்டும். பட்டிக்காட்டுப் பையன், "அடைஞ்சான் மடம், ஸார்" என்பான். உடனே இந்தப் பதிலைக் கேட்டுத் தந்திரக்காரப் பையனாக நடிக்கும் சோனியும் அவன் கோஷ்டியும் கைதட்டிக் கேலி செய்யவேண்டும். பட்டிக்காட்டான் தலையைச் சொறிந்து கொள்வான்.

முதல் ஸீன் ஆரம்பமாயிற்று.

*ஹெட்மாஸ்டர்:* அடே ஏமாளி, எந்த ஊரடா உனக்கு?

*பட்டிக்காட்டு ஏமாளி:* நீங்க பிறந்த ஊருதான், ஸார்!

ஹெட்மாஸ்டர் இதைக் கேட்டுத் திருதிருவென்று விழித்தார். தந்திரக்காரப் பையன் தலையைச் சொறிந்துகொண்டான். இரு வரும் ஒருவரை ஒருவர் பார்த்து விழித்தார்கள். சபை கலகலத் துப் போய்விட்டது. "அடே ஹெட்மாஸ்டர் 'டயலாக்' கைக் கோட்டை விட்டுட்டாருடோய்!" என்று ஒரு மூலையிலிருந்து சத்தம் வந்தது. "ஆமாண்டோய்!" என்று பதில் ஆரவாரம் எழுந்தது. ஒரே கலாட்டாத்தான்! ஸீனை அத்துடன் மூடிவிடும் படி யாகிவிட்டது.

ஸீனுக்குப் பின்புறம் உல்ப் ஆத்திரத்துடன் நந்துவிடம் உறுமினான். "என்னடா இது! நாங்க கொடுத்த பாடத்தைப் பேசாமல் வேறு என்னவோ வந்து பேசறே?"

சோனி நடுவில் குறுக்கிட்டு, "மத்தியான்னம் நடந்த ஒத்திகையில் சரியாய்ச் சொன்னாயே; இப்ப மட்டும் என்ன தம்பி? இது என்ன ரிஹர்ஸலா?" என்றான்.

"டேய், எனக்கு மறந்து போயிடுத்துடா! சரி சரி; அடுத்த ஸீனிலே பாரேன்" என்றான் நந்து.

அடுத்த ஸீன் என்ன? இரவு முழுவதும் விழித்து ஜக்கு எழுதியதை நந்து பேசலானுன். எல்லாமே தலைகீழ்ப் பாடமாய் இருந்தது. சோனியும் உல்பும் ஆத்திரம் தாங்கமாட்டாமல் குதித்தார்கள். "போடா போ! டிராமா நன்ருயிருக்க வேண்டியதுதானே? நான் என்ன பேசிஞ உனக்கென்ன?" என்ருன் நந்து.

"டிராமா ரொம்ப ஜோராய் இருக்குன்னு எல்லாரும் பேசிக்கிருடா. நீ உன் இஷ்டப்படியே பேசுடா!" என்ருன் ஜக்கு, உள்ளே வந்து. அவன் முகத்தில் குறும்புத்தனம் கூத்தாடியது.

உல்ப் ஒரே பாய்ச்சலாக மேடையில் ஸீனுக்கு முன்பாக வந்தான். "சகோதரர்களே! இத்துடன் ஹாஸ்ய நாடகம் முடிந்து விட்டது" என்று கூறிவிட்டு ஒரு மூலையில் போய் உட்கார்ந்து விசித்து விசித்து அழுதான். வெளியே தாங்கமுடியாத கூச்சலும் அட்டகாசமும் மேடையைப் பிளந்தன. "டிக்கெட் பணத்தைத் திருப்பிக் கொடு!" என்ற கூக்குரல்!

பிறகு என்ன நடந்தது தெரியுமோ? ஜக்கு மேடையில் தோன்றிஞன். "அந்த ஹெட்மாஸ்டருக்கு மாற்றலாகிவிட்டது. இனி அடுத்த ஸீன் முதல் புது ஹெட்மாஸ்டர் வரப்போகிருர்" என்று சொல்லிவிட்டு உள்ளே சென்ருன். சபை ஓய்ந்தது.

டிராமா அன்றைக்குப் பிரமாதத்திலும் பிரமாதமாக நடந்து முடிந்தது என்பதற்குக் கேட்பானேன்!

'ஜக்குவுக்கு-ஜே!'

'நந்துவுச்கு-ஜே!' என்ற கோஷங்களுடன் நாடகம் இனிது முடிந்தது.

# 7

## ஊர் திரும்புகிறுன்

ஜக்குவின் பெயர் ஒரே நாளில் பையன்களிடையே பிரபலமாகி விட்டது. தெருவில் போய்விட்டால் போதும். ஒரே அட்டகாசம்!

"அடே, இவன்தாண்டா புது ஹெட்மாஸ்டராக ஆக்ட் பண்ணினவன்!" என்பான் ஒருவன்.

"டிக்கெட்கூட இல்லாமல் எங்களை உள்ளே விட்டாண்டா" என்பான் இன்னெருவன்.

"இந்தப் பையனுடா அவ்வளவு ஜோராய் நடிச்சது?" என்று கேட்பான் வேறு ஒருவன்.

"இந்தப் பையன் இல்லேடா; இவனுக்குள்ளே வேறோர் ஆள் இருக்காண்டா!" என்பான் மற்றெருவன்.

இப்படி எல்லாரும் ஜக்குவைப்பற்றிப் புகழ்ச்சியாகவே பேசினுர்கள். நந்து இதைப் பார்த்துவிட்டு ஜக்குவிடம் வந்து, "ஏய், ஊரில் ஒருவர் பாக்கியில்லாமல் உன்னைப் பிரமாதமாய்ப் பேசுகிறுர்களடா!" என்றுன்.

"தப்பு, தப்பு! நான் இதை நம்பவே மாட்டேன்" என்றுன் ஜக்கு, படுக்கை, பை முதலியவைகளைக் கட்டி வைத்துக் கொண்டே.

"பின்னே நான் பொய்யா சொல்கிறேன்?" என்றுன் நந்து.

"பொய் இல்லே; தப்பாகச் சொல்கிறுய் என்கிறேன்!"

"சரி; அப்போ என்கூட வருகிறுயா, ரைட்டா, தப்பா பார்த்துவிடலாமா?"

"ஓ! நான் ரெடி! ஆனுல் நான் சொல்லுகிறவர்களிடந்தான் முதலில் போகவேண்டும்."

"யாரிடம்? அதையாவது சொல்!"

"முதலில் 'உல்பி'டமும் சோனிக் கபாலியிடமும் போக லாமா?"

இதை ஜக்கு சொன்னதுதான் தாமதம். இருவருமே விழுந்து விழுந்து சிரித்தார்கள். உல்பும் சோனியும் டிராமாவுக்குப் பிறகு வெளியில் தலையைக் காட்டவே இல்லை!

"நந்து, இன்னிக்கு ராத்திரி வண்டிக்கு ஊருக்குப் போகப் போகிறேன். அதற்குள் எனக்கு ஒரே ஒரு வேலே மட்டும் இந்த ஊரில் பாக்கியிருக்கிறது. நான் என்ன பிளான் போட்டிருக்கிறேன், தெரியுமா?"

"என்ன?"

"கேள், சொல்கிறேன். இன்னிக்கு என் ஜாகை மறுபடியும் மாடிக்குப் போவதுதான்!"

"ஆமாண்டா, அந்த டெலிபோன் ஆசாமியை எப்படிடா கண்டுபிடிக்கிறது? பொம்மையை எப்படிடா எடுத்துண்டு போறது?" என்ருன் நந்து.

"எல்லாம் நான் பார்த்துக்கறேன். ஆனால் நீ மட்டும் ஒரு காரியம் செய்யவேண்டும். தயங்காமல் செய்வியோ?"

"என்னடா என்னைப் பார்த்து இப்படிக் கேட்கறே? நானுடா உன் விஷயத்தில் தயங்குகிறவன்!"

"சே சே, அதுக்குச் சொல்லல்லேடா. இது அப்படித் தயங்க வேண்டிய விஷயம்! நீ போய்விட்டுச் சரியாக ஒன்பதரை மணிக்கு, மாமா ஆபீசுக்குக் கிளம்புகிற சமயத்துக்கு இங்கே வரவேண்டும். அவ்வளவுதான்!" என்ருன் ஜக்கு.

"சரி; இவ்வளவுதானே" என்று எண்ணிக்கொண்டு நந்து வீட்டுக்குச் சென்ருன்.

சரியாக ஒன்பதரை மணிக்கெல்லாம் நந்து வீட்டுக்குள் நுழைந்தான். ஜக்குவின் மாமா சாப்பிட்டுவிட்டு ஆபீசுக்குக் கிளம்பிக்கொண் டிருந்தார்.

மாடியிலிருந்து ஜக்கு ஓடோடியும் வந்தான். நந்துவே திடுக்கிட்டுப் போகும்படி ஆக்ரோஷத்துடன், "அட திருட்டுப் பயலே! ரொம்ப நல்லவன் மாதிரி வேஷம் போட்டாயேடா, பயலே! உன் வேலேயை இந்த ஜக்குவிடமா காட்டுகிருய்? அசல் காவேரித் தண்ணீர் குடிக்கிறவண்டா! உன்னைப்போலக் குழாய்த் தண்ணீர் குடிக்கிறவன் இல்லே!" என்று சொல்லிவிட்டு நந்துவின் மேல் பாய்ந்தான். நந்து திமிறினுன். ஜக்கு பிடியை விடுகிற வழியாய் இல்லே. அவன் முன் தலேமயிரைக் கெட்டியாக ஒரு கையால் பிடித்துக்கொண்டு மற்ருெரு கையால் திமிற முடியாதபடி அவனேக் கட்டிப் பிடித்துக்கொண்டான். மாமா அவர்களே விலக்குவதற்குள் இவ்வளவும் நடந்துவிட்டது.

மாமா விலக்கி விட்டபின், "நீங்கள் சிநேகமாய் இருந்துவிட்டு, இப்படிச் சண்டை போடலாமா?" என்ருர்.

"இல்லே மாமா, 'சரியாக ஒன்பதரை மணிக்கு வாடா' என்றான் மாமா. வந்ததும் வராததுமாய்ச் சண்டைக்கு வந்து விட்டான், மாமா" என்றான் நந்து.

ஜக்கு ஒன்றுமே பேசவில்லை. வெகு நேரங் கழித்து டெலிபோன் மணி கிணுகிணுத்தது. ஜக்கு இதை எதிர்பார்த்தவன் போலவே டக்கென்று ரிஸீவரைக் கையில் எடுத்தான்.

"ஹல்லோ! ஜக்குவா?"

"ஆமாம், ஜகந்நாத்."

"எப்படி இருக்கிறது உனக்கு உடம்பு?"

"ரொம்ப நன்றாகத்தான் இருக்கிறது. உங்களுக்கு...?"

"ரொம்பத் தைரியம் வந்து விட்டதோ! இன்றைக்குள் என்னை யாரென்று கண்டுபிடிக்கப் போகிறாயாமே!"



"பாதி கண்டு பிடித்து விட்டேனே!"

"ஓஹோ! அவ்வளவுக்கு வந்துவிட்டாயா? சரி; நந்துவோடு இன்றைக்குச் சண்டைக்குப் போனயா?"

"இல்லையே!"

"உண்மையில் நீ அவனேடு சண்டை போடவில்லை?"

"உண்மையில் போடவில்லை."

"நீயும் அவனும் சண்டை போட்டுக்கொண்டு இப்பொழுது ஒருவரோடு ஒருவர் பேசுவதில்லை என்று நான் சொல்கிறேன்."

"சொல்லுங்களேன்! நான் இல்லை என்கிறேன்."

"என்னிடம் பொய் சொல்லுகிருயா?" என்று மிரட்டியது அந்தக் குரல்.

ஜக்கு திரும்பினுன். கதவருகில் நந்து நின்றுகொண்டிருந்தான். கையால் சைகை காட்டி, அவன் அருகில் வந்ததும் ரிஸீவரைக் கையில் கொடுத்தான்.

"ஹலோ! நான்தான் நந்து - நந்து பேசறேன்."

"யாரு, நந்துவா?"

"ஆமாம்; என்ன ஆச்சரியமாய் இருக்கோ?"

"உனக்கும் ஜக்குவுக்கும் சற்று முன்பு பலத்த சண்டை நடக்கவில்லை?"

"நான்கூட முதல்லே அப்படித்தான் நிஜச் சண்டையாக்கும் என்று நினைச்சேன. அப்புறந்தான விஷயம புரிஞ்சுது. ஜக்கு அவன மாமா போனப்புறம் வந்து வயிறு வெடிக்கச் சிரித்தான். எனக்கே வெட்கமாகப் போயிடுத்து. 'இப்போ பாருடா, இனனும் சற்றைக்கெல்லாம் எனக்கு டெலிபோன் வரப்போகிறது. வாயேன், ஒரு வேடிக்கை!' என்று என்னை இங்கே ஜக்கு அழைச்சிண்டு வந்தான். உடனே நீங்களும் டெலிபோன் பண்ணி விட்டீர்கள! ஜக்குவின் ஜோஸ்யம் அப்படியே பலிச்சுட்டுதே!" என்ருன்.

அந்தப் பக்கத்தில் டக்கென்று ரிஸீவரைக் கீழே வைத்த ஓசை கேட்டது. நந்து, "ஹலோ, ஹல்லோ!" என்று கூப்பிட்டுப் பார்த்தான். பதிலே இல்லை. ஜக்கு சிரித்தான்.

நந்துவுக்கு எல்லாம் அதிசயமாய் இருந்தது. "சரியடா ஜக்கு. இதெல்லாம் உனக்கு எப்படித் தெரிஞ்சுது? அந்தப் பக்கத்தில இப்படிப் பேசுவது யார் என்று கண்டு பிடிச்சு

விட்டாயா? சொல்லேன்; ஏன் என்னிடம் அப்படி நிஜம்போலச் சண்டை போட்டாய்?'' என்று படபடவென்று கேட்டான்.

ஜக்குவின் சாமர்த்தியமும் புத்திக் கூர்மையும் அவனை மேலும் பிரமிக்க வைத்தன. ஜக்குவோ அலட்சியமாக, ''டேய், எவ்வளவு சுலபமான விஷயம் இது? இதைக் கண்டு பிடிப்பது என்னடா ஒரு பிரமாதம்!'' என்ருன்.

''அப்படியானுல் இவ்வளவு நாளும் கண்டுபிடிக்கிறதுக்கு என்ன? பயந்து பயந்து ஓடினயே!'' என்ருன்.

''அதுதான், அவ்வளவுக்கு எனக்குப் புத்தி எட்டவில்லை. யோசனை பண்ணிப் பார்த்த பிறகுதான் தெரிந்தது. முதல்லே டெலிபோன் வரும்போது யாருமே நிதானம் தவறித்தானே போவார்கள்.''

''எனக்கு என்னமோப்பா, இன்னமும் புரியவேயில்லை'' என்ருன் நந்து.

''எல்லாம் ராத்திரி ஸ்டேஷனுக்கு வாயேன், புரியச் சொல்கிறேன்'' என்ருன் ஜக்கு.

''ஆமாம், பொம்மை?''

''எல்லாம் ஸ்டேஷனுக்குத் தன்ஞலே வரும், பாரேன்.''

இரவு மணி எட்டு. எழும்பூர் ஸ்டேஷன் 'ஜே ஜே' என்று இருந்தது. ட்யூப் விளக்குகள் பிரகாசமாய் எரிந்தன. இந்தோ சிலோன் போட்மெயில் ரொம்பவும் கம்பீரமாக முதல் பிளாட் பாரத்தில் நின்றுகொண்டிருந்தது. ஜக்கு பீல்டு மார்ஷல் போல ஒரு தொப்பியை அணிந்துகொண்டு 'செகண்டு கிளாஸ் கம்பார்ட்மென்'டில் உட்கார்ந்திருந்தான். நந்து கீழே பேசிக் கொண்டு நின்ருன். வண்டி புறப்பட இன்னும் கால் மணிக்கு மேல் இருந்தது.

'ணங்' - எஞ்சின் பூட்டியாயிற்று!

நந்துவுக்கு வருத்தம் இவ்வளவு அவ்வளவு என்று இல்லை. பல தடவைகள் ரகசியமாகக் கண்ணைத் துடைத்துக்கொண்டு வந்தான். ஜக்குவுக்கு மட்டும் வருத்தம் இல்லையா?

''இதோ இருக்காண்டா, ஜக்கு!'' என்று குரல் கேட்டது. இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். உல்பும் சோனியுந்தான். உல்பின் கையில் ஒரு பெரிய 'பேக்கட்' இருந்தது.

ஜக்கு, கீழே இறங்கி அவர்களோடு கை குலுக்கிஞன்.

"எங்களை மன்னிச்சுடு, ஜக்கு! உன்னுடைய கெட்டிக்காரத் தனத்தையும் சிநேகத்தையும் நாங்கள் அலட்சியமாய் நினைச்சுட்டோம். நீ இங்கேயே படிக்க வரப்போகிருயாமே! எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா?" என்றுன் உல்ப்.

ஜக்கு பெருந்தன்மையுடன், "நான்தான் நியாயமாய்ப் பார்த்தால உங்களிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும். ஸ்விம்மிங் பூலிலும் டிராமாவிலும் உங்களுக்கு ரொம்பக் கஷடத்தைக் கொடுத்துவிட்டேன். போனதெலலாம் போகட்டும். நாம் இப்பவாவது சந்திசசு மனம்விட்டுப் பேசிக்கொண்டு பிரிகிருேமே! இதைவிட வேறென்ன ஆனநதம் வேண்டுமா?"

நந்துவோ உல்பின் கையிலிருந்த பெரிய பேக்கெட்டைப் பார்த்துக்கொண்டே இருந்தான. அதில்தான் அந்தப் பொம்மை இருக்க வேண்டும்! அபபடியானுல் உல்புதானு அந்த டெலிபோன் ஆசாமி! 'அட, இந்தப பயலுடைய வேலைதானு இதுவும்?' என்று தோன்றிற்று அவனுக்கு.

இந்தச் சமயத்தில் ஜக்குவின் தோளில் இரண்டு முரட்டுக் கைகள வநது அமாநதன. ஜககு மெல்லத திரும்பிப் பாாததான. அந்தப் பழைய என்ஜின் டிரைவா!

"ஹல்லோ!" என்று திரும்பி அவனிடம் தாவிக் கைகளைப் பற்றிக்கொண்டான்.

"ஹல்லோ பச்சா!" என்றுன் டிரைவர் சிரித்துக்கொண்டே. பிறகு, "டிக்கெட், கிககட் வாங்கியிருக்கிருயா? இல்லாட்டி அநதப் பழைய பாலத்துக் கிட்டயே உன்னை இறககிவிட்டுப் போயிடட்டுமா?" எனறுன்.

"இதோ ஸீட் ரிஸர்வ் பண்ணியிருக்கிறேன்!" என்றுன் ஜக்கு. அதற்குப் பிறகு டிரைவரிடம், இவர்களெல்லாம் என்னுடைய 'பிரண்ட்ஸ்.' இதோ, இப்போ என் மாமா வரபபோகிருர்! இநதப் பொம்மையைக்கூட முன்னுடி கொடுத தனுப்பி யிருக்கிருர். அவரே கொண்டு வரலாமா?" எனறு சொல்லிக்கொண்டே உல்பின் கையிலிருந்து அந்தப பேக்கெட்டை வாங்கிப் பொம்மையைப் பிரிததுக் காட்டினுன்.

"வா, அடுத்த ஜங்ஷன்லே பார்க்கிறேன் உன்னை!" என்று விடை பெற்றுககொண்டு போனுன் டிரைவர். நாழிகையாகி விட்டதே! நநதுவுககு இப்பொழுதுதான இன்னும் வியப்பாய் இருந்தது. உலபின் வேலை என்று நினைத்தது பிசகாகிவிட்டதே! 'அவன் மாமா செய்த வேலையா?' என்று எண்ணி ஆச்சரியப் பட்டான்.

இரண்டே நிமிஷங்கள்!

மாமா அவசர அவசரமாய்ப் பிளாட்பாரத்தில் நுழைந்து வந்தார். ஜக்குவைக் கண்டு, "அடேய், ஏண்டா கீழே நிற்கிறுய்? போய் இடத்தில் உட்கார்ந்துகொள்" என்ருர்.

"ரொம்ப தாங்ஸ், மாமா!" என்ருன் ஜக்கு, தன் இடத்தில் உட்கார்ந்துகொண்டதும்.

"எதுக்குடா தாங்ஸ்?"

"பொம்மையை ஜாக்கிரதையாய் வைத்திருந்து கொடுத்ததுக்கும், அப்புறம் எல்லாத்துக்குந்தான்" என்ருன் ஜக்கு.

"போக்கிரி! எப்படிடா தெரிஞ்சுகொண்டாய்?" என்ருர் அவர் சிரித்தபடி.

"நந்துவோட நிஜமாகச் சண்டை போடுவது போலப் போடாமல் இருந்தால் மாமி எங்கிட்டே டெலிபோன் செய்யும் உண்மையைச் சொல்லியிருப்பாளா?" என்ருன் ஜக்கு.

"அட போக்கிரி!" என்று மட்டுமே அவர் கூறினுர். அதற்குள், 'புஸ்' என்றது எஞ்சின். எல்லாரும் கண்ணில் ஜலம் கசிய உற்சாகமாகக் கைவீசி அவனை வழியனுப்பினுர்கள்.

# 8

## வரவேற்பு

ஜக்குவுக்குத் தஞ்சாவூர் ஸ்டேஷனில் குதூகலமான வரவேற்புக் கிடைத்தது. அவன் ஒருவருக்கும் தெரியாமல் லயன் கரை வழியாக ஊருக்குள் இறங்கிப் போய்விடலாம் என்று எண்ணினன். ஆனல் ஸ்டேஷனில், "இதோ இருக்காண்டா ஜக்கு!" என்று ஒரு குரல் வீச்சென்று கேட்டது.

திரும்பிப் பார்த்தால், சீதாராமன் கையில் ஒரு சின்ன மாலே யுடன் வண்டிக்குள் ஏறி வந்துகொண் டிருந்தான்.

யாரோ பெரிய தலைவர் வந்திருக்கிருர் என்று நினைக்கும்படி தடபுடல் பட்டது ஸ்டேஷன்.

மாலை போட்டதும் கை தட்டல்; கோஷம்; காமிரா கிளிக்.

பெரிய காரியத்தைச் சாதித்துவிட்ட தீரன் போலவும், போரை நடத்தி வென்ற மகா வீரன் போலவும், ஜக்கு வண்டிக் கதவருகில் நின்ற காட்சி கண்கொள்ளாக் காட்சியாய் இருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் அந்த எஞ்சின் டிரைவர் வேறே இறங்கி வந்து, "பலே ஜக்கு! நான் போயிட்டு வரட்டுமா? ஞாபகம் வச்சுக் கிறியா?" என்று கை குலுக்கிவிட்டுப் போனன்.

இதைப் பார்த்தவர்கள், 'இந்தப் பையன் யாரோ, என்னவோ?' என்று அசந்து போனர்கள்.

சுப்புணியும் மணியும் ஓடிவந்து ஜக்குவின் கைகளைப் பிடித்துக்கொண்டு, "ஏதாவது இரண்டு வார்த்தை பேசேன்" என்ருர்கள்.

ஜக்கு அந்தச் சமயத்தைக் கைவிடாமல், "நண்பர்களே! இதெல்லாம் என்ன? நான் உங்களைப்போல ஒருவன்தானே! பார்ப்பவர்களுக்கு நான் யாரோ வானத்திலிருந்து குதித்தவனே என்று தோன்றும். எனக்கு என்னவோ வானத்திலிருந்து குதித் தவனுகத் தோன்ருவிட்டாலும் வானத்தில் போய்க் குதித்தவன் போல இருக்கிறது. உங்கள் திருப்தியைக் கெடுக்க எனக்கு விருப்பமில்லை. அதனுல் உங்கள் வரவேற்பை நான் சந்தோஷத் துடன் ஏற்றுக்கொள்கிறேன். அதற்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்" என்ருன்.

மறுபடியும் கை தட்டல். அவன் தன்னைக் குறைத்துக் கொண்டு பேசியது மிகவும் கம்பீரமாய் இருந்தது.

எல்லாரும் கைதட்டி முடிந்த பிறகு, கடைசியாக ஒரே கை தட்டல் மட்டும் தனியாகக் கேட்டது. எல்லாரும் பார்த்தார்கள். அம்புலு!

ஜச்கு கிடுகிடென்று கீழே இறங்கி வந்து அவள் கையைப் பிடித்துக்கொண்டு, "அடி அம்புலு, நீயும் வந்திருக்கிருயா? உன்னை யார் வரச் சொன்னது?" என்ருன்.

அம்புலு திரும்பினுள். அங்கே அவளை அழைத்துக் கொண்டு வந்திருந்த ஜச்குவின் அப்பா எல்லாவற்றையும் வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றிருந்தார். ஜக்குவுக்கு ஒரே அவமானமாகப் போய்விட்டது. மாலையைக் கழற்றி அம்புலு விடம் கொடுத்துவிட்டு வெளியே போய்விட்டான்.

அம்புலுவை அன்று சாயங்காலம் அவன் பார்க்கப் போன போது அவள் முகம் வாட்டமாய் இருந்தது. அவன் கொண்டு வந்த பொம்மையைக் கூட அவள் தொடவில்லை. ஜக்கு திடுக் கிட்டு, "ஏன் வாட்டமாய் இருக்கே?" என்று கேட்டான்.

"உன்னை ஒண்ணும் கேக்கலை போ அதுக்கு!" என்ருள் அம்புலு.

"நீ கேட்காவிட்டாலும் நாளுகத்தான் கேட்கிறேன். சொல்லேன்" என்ருன் ஜக்கு.

"நான் அப்படித்தான் இருப்பேன், உனக்கென்ன?" என்ருள் அம்புலு.

"அப்படி இருக்கக் கூடாது என்ருல் கூடாதுதான்."

"ரொம்பத்தான், எப்பப் பார்த்தாலும் அதிகாரம் பண்றியோ? 'உன்னை யார் வரச் சொன்னது'ன்னு கேட்டயே. உன்னைக் கேட்டுண்டுதான் வரணுமோ ஸ்டேஷனுக்கு?"

"ஓகோ, அதுதான் கோபமோ? நீயும் அதிகாரம் செய்யேன். உன்னை யார் வேண்டாம் என்றது?"

"பின்னே 'அடி புடி' என்கிறயே. அதுமட்டும்?"

"அதனுல் என்ன தப்பு? நீ 'அடா புடா' என்று சொல்லேன். அவ்வளவுதானே!"

"சீச்சீ, நான் எதுக்காக அப்படிச் சொல்றதாம்?"

"பின்னே எதற்காக இப்படி உம்மணு மூஞ்சி மாதிரி 'உம்' என்று உட்கார்ந்திருக்கிறதாம்!"

அவன் 'உம்' என்று முகத்தை வைத்துக் காட்டியதும் அவள் சிரித்துவிட்டாள். "ஹார்பரிலே எடுத்த போட்டோவிலே

கூட இப்படித்தான் இருக்கு உன் மூஞ்சி!'' என்ருள், சிரிப்பை மறைக்க.

ஜக்கு உடனே, ''ரொம்ப ஜோராய் இருந்தது போட்டோ என்று எனக்கு எழுதியிருந்தயே?'' என்று கேட்டான்.

அதற்கு அம்புலு, ''அப்படித்தான் எழுதுவேன் போ'' என்று சிணுங்கிக்கொண்டே சொல்லிவிட்டு, எழுந்து உள்ளே ஓடிஞள்.

ஒரு வாரம் சென்றது. பள்ளிக்கூட நேரம் போக மற்ற நேரங்களில் எல்லாம் ஜக்கு வெகு சுறுசுறுப்பாக இருந்தான். அதன் பலஞகச் சிறுவர் சங்கம் ஏற்பட்டு விட்டது.

கௌரவத் தலைவராக இருக்கும்படி அவன் ஹெட்மாஸ்டரைக் கேட்க நினைத்தான். அவரைப் பார்க்கப் போகவே எல்லாருக்கும் பயம். ஆனல் ஜக்கு தைரியமாகப் போனுன்.

''நீதானேடா ஜக்கு என்கிறவன்?'' என்ருர் ஹெட்மாஸ்டர்.

''ஆமாம், ஸார்.''

''சென்னைக்குப் போய் ரொம்ப ரகளையெல்லாம் செய்தாயாமே நீ?''

''அதெல்லாம் இல்லை, ஸார்.''

''பின்னே உன் போட்டோ பத்திரிகைகளில்கூட வந்ததே?''

''ஆமாம், ஸார்.''

''நம் ஊர்ப் பெயரைக் கெடுத்தாயா, பெயரைக் காப்பாற்றிஞயா?''

''இல்லை, ஸார். ஆமாம், ஸார்.''

''எதற்காகவடா இந்தச் சிறுவர் சங்கம்?''

''அது வந்து ஸார் — உங்களுக்குத் தெரியாதா ஸார்— சென்னையிலே இப்படிப்பட்ட சங்கங்கள் நிறைய இருக்கு, ஸார். குழந்தைகள் பத்திரிகை, புஸ்தகம் வாங்கிப் படிப்பது, ஒற்றுமையாய் இருப்பது, சேர்ந்து தேகப் பயிற்சி விளையாட்டுகள் விளையாடுவது, பையன்களுக்குள்ளே ஒரு ஸ்போர்ட்டிங் ஸ்பிரிட் ஏற்படச் செய்வது, அப்புறம் எக்ஸிபிஷன், நாடகம், மீட்டிங் எல்லாம் நடத்துவது, இதெல்லாந்தான் ஸார்.''

''பேஷ் பேஷ்! அதற்கு நான் எதற்கடா தலைவராய் இருப்பது? பள்ளிக்கூடத்திலேதான் என் தொந்தரவு என்ருல் உங்கள் சங்கத்திலேயும் என் தொந்தரவு எதற்கடா?''

"நீங்க அப்படிச் சொல்லப்படாது, ஸார்.

"பின்னே?"

"நீங்க தலைவர் என்றால்தான் ஸார், எங்களுடைய அப்பா, அம்மா எல்லாரும் நம்பிக்கைப்படுவார்கள்."

"ஓகோ! அதற்கு என்னை உபயோகப் படுத்திக்கொள்ளப் பார்க்கிறாயா?"

"அது மட்டுமில்லே ஸார்! நீங்களும் எங்களை, 'இப்படிச் செய்யுங்கடா, அப்படிச் செய்யுங்கடா' என்றால் எங்களுக்கு எவ்வளவு நன்மையாய் இருக்கும்! அதுக்காகத்தான் ஸார்."

"சபாஷ். உன் மனசைச் சோதனை பண்ணிப் பார்த்தேன். இவ்வளவு கெட்டிக்காரனாக இருக்கிறாயே நீ? பெரியவன் ஆனால் பெரிய லீடராகி விடுவாய் போலிருக்கிறதே! ஆமாம்; படிப்பில் எப்படி என்று உன் வகுப்பு வாத்தியாரைக் கேட்டுப் பார்க்கிறேன்."

அவனுடைய நல்ல காலமாக அவன் வகுப்பு வாத்தியார் வராந்தாவில் நின்றுகொண் டிருந்தார்.

"ஏன் ஸார், இவன் உங்க ஸ்டூடெண்ட் தானே?" என்று விசாரித்தார் ஹெட்மாஸ்டர்.

"ஆமாம், என்ன விஷயம்?"

"இவன் படிப்பில் எப்படி ஸார் இருக்கிறான்?"

"இவனா?" என்று கேட்டு விட்டு வகுப்பு வாத்தியார் ஆங்கிலத்தில், "பிரமாதமாய்ப் பேசுவான், இருப்பான். படிப்பிலும் கெட்டிக்காரன்தான்" என்றார்.

ஜக்கு பேசாமல் நின்றான்.

"அவர் என்ன சொல்றார், பார்த்தியா? பேச்சோடு சரி என்கிறாரே" என்றார் ஹெட்மாஸ்டர் சிரித்துக்கொண்டு.

ஜக்கு, "அவர் சொன்னது எனக்கும் புரிஞ்சுது ஸார்" என்றான் அடக்கமாக.

"சரி, அடேடே, அப்படியா? ஓடு. உன்னிஷ்டப்படியே போட்டுக்கொள்!" என்றார் ஹெட்மாஸ்டர் அவன் முதுகில் தட்டிக் கொடுத்து.

வெளியிலே முடிவை எதிர்பார்த்து மற்றப் பையன்கள் நின்றுகொண் டிருந்தார்கள். ஜக்கு வெற்றியுடன் திரும்பி வந்ததைக் கண்டு ஒருவன் அவனை அப்படியே அலாக்காகத்

தூக்கினான். இன்னொருவன் கீழே பிடித்து இழுத்தான். மற்ற வர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

ஜக்கு சங்கத்தின் காரியதரிசியாக ஆனான். பெரியவர்கள் கூட அவன் காரியதரிசியாவதை வரவேற்றாகள்.

அந்த வருஷம் அவன் எக்ஸிபிஷனுக்கு ஏற்பாடு செய்தான். மின்சார ரெயில் என்ன, பேசும் கிளி என்ன, வயர்லெஸ் செட் என்ன—இப்படி எத்தனையோ மின்சார விந்தைகளும் வேடிக்கை அற்புதங்களும் விநோதச் சாமானகளும் நிறைநதிருந்தன எக்ஸி பிஷனில். ''இதைப் போல வேறு எங்குமே பார்த்ததில்லை'' என்று பெரியவாகள்கூட ஒரு முகமாக அவனைப் பாராட்டினார்கள்.

''அடேய், இவ்வளவெல்லாம் செய்துவிட்டு அடுத்த வருஷம் இந்த ஊரை விட்டு மயிலாப்பூருக்குப் படிக்கப் போனாயோ, அப்புறம் தெரியும் சேதி?''

''என்ன செய்வீர்கள்?''

''நாங்களும் உன்கூட வந்து விடுவோம். அவ்வளவுதான்.''

எல்லோரும் சிரித்தார்கள்.

அம்புலுகூடச் சொன்னாள்: ''என்னைவிட உனக்கு அந்த நந்து ரொம்ப உசத்தியாய்ப் போயிட்டானே? எங்களையெல்லாம் விட்டுவிட்டு நீ அங்கே படிக்கிறதுக்காகப் போகவே கூடாது. ஆமாம்; சொல்லிப்புட்டேன்!''

''ஏது, உத்தரவு ரொம்பக் கடுமையாக இருக்கிறதே!''

''அதுக்கு நான் என்ன பண்றது? உனக்கும் தெரிஞ்சால் நீயும் கடுமையாக உத்தரவு போடேன் எனக்கு!'' என்றாள் அம்புலு.

''இரு இரு'' என்று சிரித்துக்கொண்டே போனான் ஜக்கு.

அந்த வருஷம் அந்த ஊர்ச் சங்கத்தின் பெயரை அடிக்கடி நீங்கள் கூடப் பத்திரிகைகளில் பார்த்திருக்கலாமே!



